# நூல் அறிமுகம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : **வெளிச்சத்திற்கு வாங்க-2** |
| நூல் ஆசிரியர் | : விசு அய்யர் |
| எழுத்து | : 11 புள்ளி |
| முதற் பதிப்பு | : 2023 |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| கணினி அச்சு | : மணி பதிப்பகம் |
| பக்கம் | : 72 |
| மதிப்பு | : இந்திய ரூபாயில் ரூ.75 |

# மதிப்புரை

முதல் பகுதி வெளிச்சத்திற்கு வாங்க புத்தகத்திற்கு மதிப்புரை வழங்குகியவரே இரண்டாவது பகுதிக்கும் மதிப்புரை வழங்கும் வாய்ப்பை பெற்று இருக்கிறேன். இந்த வாய்ப்பினை தந்த இந்நூலாசிரியருக்கு வணக்கத்தையும் நன்றியையும் பதிவு செய்கிறேன்.



**R. Manikandan,** B.Com.
Treasurer, arulalayam

ஒரு சிந்தனையை எப்படி லாவகமாக கையாள்வது எப்படி அந்த சிந்தனையை நடைமுறைக்கு ஏற்ப எடுத்துச் சொல்வது எப்படி என்பதை இந்த நூலாசிரியர் விசு அய்யர் அவர்களிடம் இருந்து கற்றுக் கொள்ள வேண்டும்.

படைப்புக்கு படைப்பு ஆர்வம் குறையாமல், சலிப்பு ஏற்படாமல், ஒரு முறை சொன்ன செய்திகளை வார்த்தைகளை மறுமுறை பயன்படுத்தாத வகையில் தன எண்ணங்களை பதிப்பிக்கும் இவர் தம் பதிவுகளை பார்த்து வியந்து இருக்கிறேன்.

ஒரு சோதிட குழுவில், தற்செயலாக இவருடைய சோதிட சிந்தனைகளையும், குழுவில் இவர் தம் படைப்புகளையும் ரசித்து பழகியவன் பன்முக திறமை பெற்ற இந்த நூல் ஆசிரியரின் படைப்புகளில், வெளிச்சத்திற்கு வாங்க என்ற புத்தகத்தின் பாகம் 2 இப்போது புதிய பொலிவுடன் வாழ்க்கைக்கு தேவையான செய்திகளுடன், பால சோதிடம் என்ற வார இதழில் வெளியான தனது கட்டுரைகளை தொகுத்து ஒரு நூல் படைத்து இருக்கிறார்.

ஒவ்வொரு படைப்பிலும் வாசகர்களை வெளிச்சத்திற்கு அழைத்து சென்று இருக்கிறார் என்பது நிதர்சனமான உண்மை. இது சோதிட சிந்தனைகளை சொல்லி வரும் புத்தகம், அதனால் சோதிடர்களுக்கு மட்டுமே பயன்தரும் என்ற நிலையில் இருந்து மாறி மற்றவர்களையும் சோதிடத்தின் மீது ஆர்வமும் ஈர்ப்பும் ஏற்படும் வகையில் இதனை படைத்து இருப்பது பாராட்டுக்குரியது.

எனக்கு தொழில் சோதிடம் இல்லை என்றாலும் சோதிடம் என்னும் கடலில் நீந்தி கொண்டு இருக்கும் ஒரு நீச்சல்காரன் நான். எங்கள் அலுவலகத்தில் உடன் பணிபுரிபவர்களுக்கு நான் தான் சோதிடன் என்ற வகையில் வளர்ந்து இருக்கும் நான் இன்னும் பல படிகளை ஏற வேண்டும் என்பது ஒவ்வொரு அனுபவத்திலும் உணர்கிறேன்.

தமக்கு என தனி பாணியை அமைத்துக்கொண்டு சிந்தனைகளை படைக்கும் இந்த நூல் ஆசிரியரின் அடியொட்டி, நானும் இன்று படித்துக் கொண்டு இருப்பவன், ஒரு நூல் படைப்பேன் என்ற உறுதியை ஏற்படுத்தி தந்து உள்ளது இந்த வெளிச்சத்திற்கு வாங்க.

இந்நூல் ஆசிரியர் படைக்கும் பங்கு சந்தை குறிப்புகள் மிகச்சரியாக இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டது உண்டு. அந்த வகையில் இந்த நூலில் 2023 ஆம் ஆண்டு பங்கு சந்தை பலன்களை சொன்னதை இந்த புத்தகத்தில் இணைத்து செய்து இருப்பது பாராட்டுக்குரியது. பங்கு சந்தை, மருத்துவ சோதிடம், காதல் குறிப்பு என ஒவ்வொன்றிலும் தன் திறமையை பதித்து இருக்கும் இந்நூலாசிரியரை பாராட்டி, இந்த வெளிச்சத்திற்கு வாங்க பகுதி 2 வழக்கம் போல பாராட்டுக்களை பெறும் என்று நம்பிக்கையுடன் மனம் நிறைந்த வாழ்த்துக்களை பதிவு செய்கிறேன்.

மின் நூலாக வெளி வரும் இந்த புத்தகத்தை அமேசான், விக்கிமீடியா, மற்றும் மின் நூலகத்தில் கிடைக்கும் படி செய்து இருப்பது பாராட்டுக்குரியது. 29 நாடுகளில் நேயர்களை கொண்ட இந்நூல் ஆசிரியரின் podcast சானலில் ஆடியோ புத்தகமாகவும் ஒளிபரப்புவது பாராட்டுக்குரியது.

அன்பர்கள் இந்த புத்தகத்தை வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும் என அன்புடன் விரும்புகிறேன்..

உங்கள்

**மணிகண்டன்**

maniiyer73@gmail.com

# என்னுரை

எழுத்து எனக்கு தொழில் இல்லை என்றாலும் எழுத தொடங்கிய உடன் என்னையும் அறியாமல் சிந்தனை வந்து விழுகிறது அதை படைத்து பதிவு செய்கிறேன் என்ற அறிமுகத்தை தவிர புதிதாக என்ன சொல்லிவிட போகிறேன் என நினைத்து தான் எழுத தொடங்கினேன்.

எனது ஜாதகத்தில் சந்திரன் உச்சம் பெற்று இருப்பதால் என்னையும் அறியாமல் சிந்தனை வந்து விழுகிறது என்றால் அந்த சோதிட கலையை எண்ணி வியக்காமல் இருக்க முடியுமா என்ன?

இந்த புத்தகத்தின் இறுதி பகுதியில், 2023 க்கான ராசி பலன் சொல்வதற்கு பதில், இந்த ஆண்டில், பங்கு சந்தை எப்படி இருக்கும் என்ற கணிப்பு தரப்பட்டுள்ளது. இந்த சந்தை நிலவரத்தை பல முறை சரியாக சொல்லி உள்ளதால் இந்த முயற்சி இந்த முறை செய்து ஆண்டு பலனாக சொல்லி இருக்கிறோம். இது சரியாக உள்ளதா இதன் நிலைப்பாடு என்ன என்பது இந்த ஆண்டின் நிறைவில் தெரியும். அப்போது உங்கள் கருத்துக்களையும், குறிப்புகளையும் பதிவு செய்யுங்கள். என்னை திருத்திக் கொள்ளவும், வளர்த்துக் கொள்ளவும் இது மிக்க பயனுள்ளதாக இருக்கும்.

வெளிச்சத்திற்கு வாங்க என்ற நூலில் முதல் பகுதி சென்ற ஆண்டு வெளியானது. நிறைந்த பாராட்டுக்களை பெற்ற அந்த புத்தகத்தின் வாசகர்கள் தந்த ஊக்கம் அதன் இரண்டாவது பகுதியினை படைத்து தரும்படி அமைந்து விட்டது. இந்த பதிவினை

இந்த முயற்சியில் ஊக்கப்படுத்திய வாசக அன்பர்களுக்கும் சிந்தனைகளை நக்கீரன் குழுமத்தில் இருந்து வரும் பால சோதிடம் என்ற வார இதழில் வெளி வர செய்த பாலசோதிடம் ஆசிரியர் திரு. முருகு.பாலமுருகன் அவர்களுக்கும், நக்கீரன் குழுமத்திற்கும் நன்றிகளை பதிவு செய்கிறேன்.

ஒரு சிந்தனையை எடுத்து நூல் முழுவதும் தருவதற்கு பதிலாக , கட்டுரைக்கு ஒரு சிந்தனை என்று எடுத்து அதனை சோதிட குறிப்புகளுடன் இணைத்து செய்தது தான் இந்த வெளிச்சத்திற்கு வாங்க பகுதி 2. முதல் பகுதி எப்படி அமைந்ததோ அதே பாணியில் வடிவைமப்பில் மட்டும் சில மாற்றங்களை செய்து படிப்பவர் ரசனை குறையாமல், சோர்வோ சலிப்போ ஒரு துளியும் ஏற்படாத வகையில் அமைத்து தந்துள்ளது.

இந்த நூல் வடிவைமப்பிலும், மின் நூலாக பதிப்பித்து தந்ததிலும் தன் ஆர்வத்தையும் நேரத்தையும் முழுமையாக நமக்காக தந்த மணி பதிப்பகத்தாருக்கு நெஞ்சம் நிறைந்த நன்றிகளை பதிவு செய்கிறேன்.

எனது அன்பு வேண்டுகோளை ஏற்று நூலிற்கு மதிப்புரை தந்த அருளாலயம் அமைப்பின் பொருளாளர் மும்பை திரு மணிகண்டன் அவர்களுக்கு நெஞ்சம் நெகிழ்ந்த நன்றியையும் வாழ்த்துக்களையும் பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு பதிப்பு என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டுகிறோம்.

இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும். 29 நாடுகளில் வாசகர்களை கொண்ட channel G என்ற podcast சானலில் தொடர் நிகழ்ச்சியாக ஆடியோவாகவும் கேட்டு பயன்பெறலாம்.

வாசகர்களின் அன்பு ஆதாரவுக்கு இரு கரம் கூப்பி, நன்றிகளை பதிவு செய்து நூலுக்குள் அழைத்து செல்கிறேன்.

பேரன்புடன்

**விசு அய்யர்**

iyervisuiyer@gmail.com

# “வெளிச்சத்திற்கு வாங்க...”

## - 23 -

வேற்றுமையில் ஒற்றுமை தான் வளர்ச்சிக்கு அடித்தளம். விரல்கள் கைகளில் ஐந்து இருந்தும் அவை ஒவ்வொன்றும் ஒரு அளவில் தானே இருக்கிறது.

நம்ம கை தான், நம்ம விரல் தான், ஆனால் அவை ஒரே மாதிரியாகவா இருக்கிறது. இதே போல தான் கால்களிலும். விரல்கள் மட்டுமல்ல, மற்ற அக மற்றும் புற உறுப்புகளிலும் இப்படி தான் இவை ஒரு மாதிரியாக இருந்தாலும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை.

அடிப்படையில் பழக்கம், வழக்கம், வாழ்க்கை முறை என நாம் வேறுபட்டு இருப்பது இருந்தாலும் அன்பால், நட்பால், உணர்வால், ஒன்று தான் என்பதை சொல்லித் தானா தெரிய வேண்டு . இது புரியாத சிலர் எல்லா வற்றையும் ஒன்றாக இணைக்க நினைத்தால் அது சரியாக வருமா?

ஆட்டுக்கும் நான்கு கால்கள் தான், மாட்டுக்கும் நான்கு கால்கள் தான், இரண்டும் பால் கொடுப்பவை தான். இரண்டுக்கும் கொம்பு உள்ளது தான், ஆனால் ஆடு வேறு, மாடு வேறு தானே...

இவர், என்ன சொல்ல வருகிறார் என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது. சோதிடத்தில் ஒன்பது கிரகங்கள் தான் 12 ராசி கட்டங்கள் தான் ஆனால் அவை கையாளும் விதம் ஒவ்வொரு பகுதியிலும் வேறு மாதிரியாக இருக்கும் என்பது உங்களுக்கு தெரிந்து இருக்க வேண்டும் இல்லையா.

சில தென்னகத்தில் உள்ள சோதிடரிடம் வடநாட்டு முறையில் எழுதப்பட்ட ஜாதகத்தை கொடுத்தால் அவர்கள் தடுமாறுவார்கள், அதே

போல தென்னகத்தில் எழுதப்பட்ட ஜாதகத்தை வட நாட்டு சோதிடரிடம் கொடுத்து பாருங்கள், நம்மிடம் அதை திருப்பி கொடுத்து விட்டு குறிப்புகளை கொண்டு அவர்களே ஜாதகம் கணித்து பலன் சொல்லுவார்கள்.

ராசியோ, கிரகமோ, விதியோ, தசா புத்தியோ எல்லாம் அடிப்படையில் ஒன்று தான் ஆனாலும் அவற்றை அணுகும் முறை மாறுபடுகிறது அல்லவா..?

ஜோதிட புலமை பெற்ற தென்னகத்தில் உள்ள சோதிடர்கள் வட நாட்டு பாணியில் எழுதப்பட்ட ஜாதக கட்டங்களை எப்படி அணுகுவது என்பதை தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்காக தான் இந்த சிந்தனை.

தென்னகத்தில் வரையப்பட்ட ஜாதக கட்டத்தில் ராசிகள் மாறாது மேஷத்தில் தொடங்கி மீனத்தில் முடியும். அவை கடிகார சுற்று பகுதியில் வரிசையாக ஒவ்வொரு சதுர கட்டத்திலும் அமைந்து இருக்கும்.

திரிகோணமும், கேந்திரமும் இரு தரப்பினருக்கும் ஒன்று தான். ஆனால் வட நாட்டு பாணியில் எழுதப்பட்ட ஜாதக கட்டத்தின் அமைப்பே தென்னகத்தில் எழுதப்பட்டது போல இருக்காது. அதான் படிப்பதற்கும் பார்ப்பதற்கும் தென்னக சோதிடர்களுக்கு வேறு மாதிரி தெரியும். சிலருக்கு தடுமாற்றமும் ஏற்படும்.



அதை விளக்கி புரிந்து கொண்டு விட்டால் எந்த ஜாதகமாக இருந்தால் என்ன, படித்து பலன் சொல்லிவிட வேண்டியது தானே என்று மனதில் நம்பிக்கையும் தைரியமும் வந்து விடும் இல்லையா.

ஒரு பெரிய கட்டம் அதன் நான்கு மூலைகளை இணைத்து (diagnal) ஒரு நேர் கோடு வரைய வேண்டும். இது கோணமாக வந்து விடும். ஆக 90 டிகிரி அமைப்பில் நான்கு கோணம் வந்து விடும் அல்லவா.

அதே போல நான்கு பக்கத்திலும் ஒவ்வொரு பகுதியிலும் அதன் மைய பகுதியை எடுத்து அடுத்த பகுதியில் உள்ள மைய புள்ளியில் இணைக்க வேண்டும். இது கேந்திர அமைப்பில் வந்து விடும் அல்லவா.. அவ்வளவு தான் பண்ணிரெண்டு முக்கோண வீடுகள் வந்து விடும் இது தான் ராசி கட்டம். (படத்தில் உள்ளது கவனிக்கவும்.)

தென்னைக ஜாதக கட்டத்தில் ராசிகள் மாறாது முதல் ராசி மேஷம் என்றால் ஐந்தாம் ராசி சிம்மம் இப்படி தான் எல்லா ஜாதகத்திலும் இருக்கும். ஆனால் பாவகம் மாறும், காரணம் எந்த இலக்கின ஜாதகம் என்பதை வைத்து தானே பாவகத்தை குறித்து சொல்ல வேண்டும். ஆனால், வட நாட்டு முறையில் எழுதப்பட்ட ஜாதக கட்டத்தில் பாவகம் மாறாது ராசிகள் மாறும். இங்கே தான் சிலருக்கு தடுமாற்றம் வரும். இந்த அடிப்படையை புரிந்து கொண்டால் பலன் சொல்வது சுலபம்.

தென்னத்து சோதிடர்கள் பாவகத்தை லக்கினத்தில் இருந்து எண்ணி சொல்லுவார்கள்.வட நாட்டு சோதிடர்கள் ஜாதகத்தை பார்த்தவுடன் எந்தபாவகத்தில் எந்த கிரகம் உள்ளது என பொட்டில் அடித்தது போல சொல்லி விடுவார்கள். இவ்வளவு தான் வித்தியாசம்.

உதாரணமாக ஒரு ஜாதகத்தை வட நாட்டு மற்றும் தென்னக பாணியில் எழுதி காட்டி உள்ளது அதை படித்து நீங்கள் சுலபமாக புரிந்து கொள்ள முடியும்.

| | | | |
|---|---|---|---|
| குரு | செவ் ரா | சந் | சுக் |
| ல | | | சூ பு |
| சனி | | | |
| | | கே | |

தமிழில் உள்ள சோதிட சிந்தனை முத்துக்களை உலகறிய செய்ய வேண்டும் என்றால், தென்னக சோதிடர்கள், பலதரப்பட்ட சோதிட அணுகுமுறைகளை தெரிந்து கொள்வதுடன், எதையும் கையாளும் திறமையுடன் இருக்க வேண்டும். ஊருக்கு நல்லது சொல்வோம் என்ற பாரதியின் வார்த்தைகளை மனதில் பதித்து, தமிழ் சிந்தனைகளை எந்த பாணியிலும் சொல்வதற்கு பழகி கொள்ள வேண்டும்.

தென்னக சோதிடர்கள் தென்னக எல்லையை கடந்து உலகம் முழுவதும் பிரகாசிக்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் பிறந்தது தான் இந்த வார சிந்தனை.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 24 -

சார்...

நான் கணக்கில கொஞ்சம் வீக்... என்று சொல்லும் நபரா நீங்கள்.

பட்டனை தட்டினால் சோதிட கட்டம் வந்து விடுகிறது அப்புறம் எதுக்கு சார் கணக்கு எல்லாம். எல்லாம் கண் கட்டி வித்தை போல அஷ்ட வர்க்கம் தச வர்க்கம் என ஒன்னு விடாமல் நொடியில் கிடைக்கிறதே என்று சொல்றீங்க புரிகிறது..

முன்பே சொன்னது போல தான் வாழ்க்கையோடு ஒன்றி பிணைந்தது தான் சோதிடம். இது சோதிடம் என்று தெரியாமல் நாம் அதை பயன்பாட்டில் வைத்து இருக்கிறோம் என்பது தான் உண்மை என்பதை நாம் உணரும் போது தான் இதன் உண்மை விளங்கும்.

சரி.. இதை இப்படி சொல்லி காட்டுகிறேன் சரியாக உள்ளதா சொல்லுங்கள்..

இன்றைய நாளில் நமக்கு அடிப்படை மின்சார கணக்கு தெரிந்து இருக்க வேண்டிய அவசியம் வந்து விட்டது.. தமிழகத்தில், மின் கட்டணம் உயர போகிறதோ இல்லையோ.. எப்படியாவது மின் கட்டணத்தை குறைக்க வேண்டும் என்ற முயற்சியில், சோலார் போடலாமா என்று அவரவர்கள் யோசிக்க தொடங்கி விட்டார்கள்.

பெட்ரோல் விலையை பார்த்து பயந்து பேட்டரி வண்டிக்கு மாறுவது போல என்று நீங்க சொல்ல வருவது காதில் விழுகிறது.. நாம் அந்த பிரச்னைக்கு போக வேண்டாம்.

இந்த சோலார் கணக்கு என்று தொடங்கியதும், volt, amps, waat என கணக்கு பண்ணி, எத்தனை வாட் சோலார் பேணல் போட வேண்டும் என்று கணக்கு போட தொடங்கினால், வோல்ட் ஆம்ப்ஸ், வாட்

இதெல்லாம் என்ன என்று சொல்ல வேண்டும். அதை இன்னொரு சமயத்தில் வாய்ப்பு கிடைக்கும்போது சிந்திப்போம். இல்லை என்றால், எலெக்ட்ரிக்கல் தெரியாதவர்கள் நம்மை ஒரு மாதிரி பார்க்க தொடங்கி விடுவார்கள்.

அதனால் சுலபமாக புரிந்து கொள்ள சின்ன விஷயத்தை எடுத்துக் கொள்வோம். ஒரு பிளக் வயரை பாருங்கள். அதில் இரண்டு வயர் நிச்சயம் இருக்கும். ஒரு கருப்பு வயர் இருக்கும். இன்னொன்று சிவப்பு வயர் இருக்கும். கருப்பு வயர் தான் நெகடிவ் என்று சொல்லுவாங்க, சிவப்பு வயர் தான்பாசிடிவ் என்று சொல்லுவாங்க.. இந்த இரண்டும் இருந்தால் தான் பல்பு ஒளிரும், அல்லது மின்சாதன பொருள் வேலை செய்யும்

அட ஆமாங்க...! என்று சொல்லியபடியே சோதிடத்தை கூட எடுத்துக் கொள்ளுங்கள்.. கருப்பு தான் சனி, சிவப்பு தான் செவ்வாய் என்பதை அதன் நிறத்தில் இருந்தே புரிந்து கொள்ள முடியும் இல்லையா.

இப்போ கருப்பு, சிவப்பு (நீங்க வேற எதையாவது நினைக்க போறீங்க.) அதாவது நெகடிவ் மற்றும் பாசிடிவ் இரண்டையும் ஒரே இடத்தில் கொடுத்து பாருங்கள். உடனே fuse போயிடும் அல்லது வெடித்து விடும் இல்லையா..

ஒரு ஜாதகத்தில், சனியும் செவ்வாயும் சேர்ந்தால் விபத்து ஏற்படும் இல்லையா. (சனி மேல் கோச்சார செவ்வாய் என்று சொன்னால் தெளிவாக புரியும்) இவ்வளவு தான் சோதிட சிந்தனை என்றால் இயல்பு நிலையில் ஒரு சோதிட குறிப்பை எத்தனை சுலபமாக வைத்து இருக்கிறார்கள் என்பதை புரிந்து கொள்ள முடிகிறது அல்லவா. இது போன்ற சோதிட குறிப்புகளை மனதில் பதித்து விட்டால் ஜாதகத்தை பார்த்தவுடன் அல்லது கோச்சாரத்தில் உள்ள கிரக நிலைகளை பார்த்தவுடன் இதை சொல்ல முடியும் அல்லவா.

நியூற்றல் என்று ஒன்று இருக்குமே அது என்ன என்று குறுக்கே கேட்க வருகிறீர்கள் புரிகிறது அது மஞ்சள் நிறத்தில் இருக்கும். அது தான் புதன்.

புதனுக்குரிய நிறம் மஞ்சள், செவ்வாய்க்கு உரிய நிறம் சிவப்பு, சனிக்கு உரிய நிறம் கருப்பு மற்றும் அடர் கருநீலம் என்பதை சொல்லித்தானா உங்களுக்கு தெரிய வேண்டும்.

சரிங்க ஐயா, இதெல்லாம் சரி. ஆனால், நமக்கு take home என்பது போல இந்த கணக்கை வைத்து ஏதாவது சொல்ல கூடாதா என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது. உங்களுக்காக தான் இந்த வார சிந்தனை.

ஒரு பேப்பரையும் பேனாவையும் எடுத்துக் கொள்ளுங்கள். இப்போ எங்கே சார் அதெல்லாம் எல்லாம் தடவி பார்க்கிற செல்போன் தான் என்று சொல்பவராக நீங்கள் இருந்தால் அதில் கால்குலேட்டர் பக்கத்தை திறந்து கொள்ளுங்கள்.

உங்கள் பிறந்த தேதியை எழுதிக் கொள்ளுங்கள். உதாரணமாக 1990, இத்துடன், இந்த ஆண்டின் தொகையை கூட்டிக் கொள்ளுங்கள், (1+9+9+0=19) அந்த தொகையை பிறந்த ஆண்டுடன் கூட்டிக் கொள்ளுங்கள். அதாவது (1990+19=2009) இப்போ பிளாஷ் பேக் ஒட்டி பாருங்கள், அந்த ஆண்டு உங்கள் வாழ்க்கையில் திருப்பு முனையை தந்து இருக்கும்.

அட ஆமாங்க....! என்று சொல்ல வருகிறீர்களா கொஞ்சம் பொறுங்கள்..

இப்போ கிடைத்த இந்த தொகை அதாவது 2009 உடன் இந்த கூட்டு தொகையை கூட்டி கொள்ளுங்கள் (அதாவது 2009+11=2020) மறுபடியும் இந்த 2020 ஆம் ஆண்டு உங்கள் வாழ்க்கையில் திருப்பு முனை ஏற்பட்டு இருக்கும்.

இதே போல கூட்டிக் கொண்டே போனால் அடுத்த திருப்பு முனை உங்கள் வாழ்கையில் எப்போது என்று நீங்களே தெரிந்து கொள்ளலாம். இந்த கணக்கு எட்டு முறை வரை சரியாக வரும் என்ற குறிப்பையும் சேர்த்து தெரிந்து கொள்ளுங்கள்..

இந்த கணக்கு தெரிந்து கொண்டால் முதலில் சொன்ன சோலார் கணக்கை சுலபாக புரிந்து கொள்ள முடியும். அதாவது ஒரு மின்சாதனத்தின் வாட் என்பது வோல்ட், மற்றும் ஆம்ப்ஸ் இதன் பெருக்கு தொகையே ஆகும். ஆக எத்தனை வாட் சோலார் பேணல் போடுவது என்ற கணக்கை தெரிந்து கொள்ள, எவ்வளவு லோடு நாம் பயன்படுத்த போகிறோம் என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.. அதாவது 200 வாட் பயன்பாட்டின் அளவு என்றால் 300 வாட் சோலார் பேணல் தேவை என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

இந்த சோலார் பேணல், நீல கலரில் (polycrystalline) வரும் அல்லது கருப்பு கலரில் (monocrystalline) வரும். இந்த இரண்டுமே கர்ம காரகனான சனியின் காரகத்துவ அமைப்பில் வரும். சூரியனும் சனியும் பகை என்பது நமக்கு தெரிந்த விஷயம் தான் இதை வைத்து சோலார் பேணல் கொண்டு எப்படி மின்சாரம் கிடைக்கிறது உபயோகிக்கும் பொருட்கள் எப்படி செயல்பாட்டில் வருகிறது என்ற சோதிட சிந்தனையை இணைத்து சிந்தித்து தான் பாருங்களேன்.. மற்றது உங்களுக்கே புரியும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 25 -

அது ஒரு இரவு நேரம்.

அவசர அவசரமாக சாப்பிட்டு விட்டு அவள் கிளம்பினாள். அவள் தங்கி இருந்த அறை இரண்டாவது மாடியில்..

யாரோ பின்னால் இருந்து follow-up செய்வது போல உணர்ந்ததால், அவள் லிப்ட் பயன்படுத்தாமல் மாடிப்படி வழியாக ஏறி செல்ல முடிவு செய்து, படிக்கட்டில் கால் வைக்க தொடங்கினாள்.

அவள் நினைத்தது போலவே ஒரு உருவம்.. கறுப்பு நிறத்தில் ஜீன்ஸ் பேன்ட், வெள்ளை நிறத்தில் டீ ஷர்ட்... அந்த டீ ஷர்ட்டில் நீல நிறத்தில் ஆங்கிலத்தில் ஏதோ எழுதி இருக்கிறது.. இருட்டில் என்ன எழுதி உள்ளது என சரியாக தெரியவில்லை.

அவள் உயரமான செருப்பு அணிந்து இருந்ததால், அவள் ஒவ்வொரு படிக்கட்டிலும் கால் வைக்கும் போதும், “டொக்....” “டொக்” என்ற சப்தம்.. அது காலனியின் சப்தம் தான். அந்த சப்தத்தின் எதிரொலி போல் இன்னொரு “டொக்..”, “டொக்...”

நிச்சயம் அது அந்த ஜீன்ஸ் போட்ட உருவத்தின் shoe சப்தம் தான்.. அவள் பயந்து அடித்து அவசரமாக ரூமுக்கு போய் கதவை தாழிட்டு கொண்டாள்.

சிறிது நேரத்தில்...மறுபடியும் ”டொக்...” “டொக்...” இது கதவை தட்டும் சப்தம்..

பயந்தபடியே கதவை திறக்கலாமா வேண்டாமா என்று யோசனையில், சிறிது நேரத்திற்கு பிறகு மெதுவாக கதவை திறந்த அவளுக்கு காத்திருந்தது ஒரு பெரிய அதிர்ச்சி.. அவ்வளவு தான்..

மறுநாள் காலையில் தலைப்பு செய்தி, பிரபலமான இவர் மரணம். அது கொலையா தற்கொலையா என விசாரணை நடந்து கொண்டு இருக்கிறது. பிரேத பரிசோதனைக்கு பிறகு தான் முழு விவரம் தெரியும் என்று சஸ்பென்ஸ் தருவது போல ஒரு செய்தி.

உங்களை கொஞ்சம் தட்டி எழுப்பிக் கொள்ளுங்கள்.. இது க்ரைம் கதை அல்ல... இது போல செய்திகள் பல இடங்களில் இருந்து நாம் விரும்பாவிட்டாலும் நம் வீட்டு தொலைக்காட்சி பெட்டியிலும் செய்தி தாள்களிலும் வந்து கொண்டு தான் இருக்கிறது.

அது சரியா தவறா என்று சொல்வது நம்ம வேலை இல்லை.. எந்த மரணத்தை பற்றி குறிப்பிட்டு சொல்வதும் நமது வேலை இல்லை.

ஒரு ஜாதகத்தை பார்த்து, எதிர்கால சம்பவங்களை சொல்கிறோம். திருமணம் தொழில் மற்றும் மருத்துவ சோதிடம் என பல நிலைகளில் சோதிடம் சொல்லப் படுகிறது என்பதை அறிகிறோம்.

ஆனால், தொடர்ந்து இது போல பல செய்திகள் வந்து கொண்டு இருப்பதால், துப்பறியும் துறையில் இந்த சோதிட குறிப்புகள் உதவியாக இருக்குமா? அது எப்படி என்று சொல்ல முடியுமா? என்று சிலருக்கு சிந்தனை வரலாம். அவர்கள் சிந்தனைக்கு பதில் தருவதற்கு தான் இந்த வார செய்தி.

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் இறந்தவர் மீண்டு வர போவது இல்லை. பிறப்பு என்று ஒன்று இருக்கும் போது நிச்சயம் இறப்பு வந்தே தீரும். அது எப்போது எப்படி என்பது தான் மில்லியன் டாலர் கேள்வியாக இருக்கும்.

பொதுவான நிலையில் ஒரு மரணம் ஏழு வகையில் வரலாம். அவை, 1) இயற்கையாக சம்பவிக்கும் மரணம் 2) கொலையால் வரும் மரணம் 3) தற்கொலையால் வரும் மரணம் 4) விபத்தில் சம்பவிக்கும் மரணம் 5) கூட்டு மரணம் (maas death) 6) அரசு தண்டனையால் மரணம்

7) மருத்துவ சிகிச்சையில் மரணம். இதை பொதுவாக மரணம் துர்மரணம் என்ற இரண்டில் அடக்கி விடலாம் என்றாலும் தனித்தனியாக சொல்வது தான் சோதிட குறிப்புகள்.

ஒரு மரணம் சந்தேகத்தின் பார்வையில் நடந்து விட்டால், இறந்த அந்த உடலை மருத்துவ ரீதியில், துப்பறியும் பார்வையில் உடல் கூறு ஆய்வு (போஸ்ட் மார்டம்) செய்வார்கள். அதில் தரும் ரிப்போர்ட் வைத்து மேல் விசாரணை செய்ய இது உதவியாக இருக்கும். நீதி மன்றத்தில் இது சாட்சியாகவும் பல சமயங்களில் செயல்படும்.

சோதிட பார்வையில் இதை சொல்ல வேண்டும் என்றால், குறிப்பாக சில சிந்தனைகளை மட்டும் உங்களுக்கு தருகிறேன் சரியாக உள்ளதா சொல்லுங்கள்.

பொதுவாக சோதிடத்தில், பிரேத தோஷம், பிரேத சாபம், பித்ரு சாபம், பித்ரு தோஷம், தனிஷ்டை என பல நிலையில் சொல்லுவார்கள்.

ஆனால் பாருங்கள், ஒரு மரணம் கொலையா ..? தற்கொலையா...? என்று சொல்வதற்கு நமக்கு கை கொடுக்கும் கிரகங்கள், சனி, ராகு, செவ்வாய் மற்றும் புதன்.

புதன் வந்தால் அது தற்கொலையாக இருக்கும். சனி ராகு செவ்வாய் வந்தால் அது கொலையாக இருக்கும். ராகுவுக்கு பதில் கேது வந்தால், கொலையை தற்கொலையாக திரித்து சொல்வார்கள் மற்றவர்களையும் அப்படியே நம்ப வைத்து விடுவார்கள். என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

சரி இதை எப்படி ஜாதகத்தில் பொருத்தி பார்ப்பது என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. இறந்தவரின் ஒரு ஜாதகத்தை வைத்து இவர் எப்படி இறந்து இருப்பார் என்று சொல்வது போல "புண்ணிய சக்கரம்" போட்டு அடுத்த இந்த ஆவி என்னவாக இருக்கும் என்று சொல்லும்

முறையும் நமது பழக்கத்தில் உண்டு என்பதையும் தெரிந்து கொள்ளுங்கள்.

சம்பவம் நடந்த அன்றைய கோச்சாரத்தையும் துணையாக கொண்டு ஒரு மரணம் கொலையா..? தற்கொலையா என்று சொல்லி விடலாம். சட்ட ரீதியாக நிரூபணம் செய்ய வேறு பல முறை இருந்தாலும், சோதிட பார்வையில் இதை இப்படி சிந்திக்கலாம்.

செவ்வாய், ராகு, சனி தொடர்பு இருந்தால், அது கொலை மரணமாக இருக்கும். இது போன்ற துப்பறியும் சோதிட முறையை அனுபவம் பெற்ற சோதிடரால் மட்டுமே சொல்ல முடியும். எனக்கு அப்படி இருக்கிறதே என்று யாரும் பயப்படவோ, சந்தேகமாக கேட்கவோ தேவையில்லை..

இது ஒரு குறிப்பு அவ்வளவு தான் இது போன்ற நிகழ்வுகளுக்கு அஷ்டமாதிபதி நிலை, 2 மற்றும் 7 ஆம் இடத்தின் நிலை கோச்சாரத்தில் அஷ்டமாதிபதியுடன் இணைவை பெற்ற கிரகங்கள் அது அமர்ந்த இடம் என பல நிலையில் வைத்து சிந்திக்க வேண்டும் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

இதில் ராகுவுக்கு பதில் கேது வந்தால் கொலை தற்கொலையாக சித்தரித்து சொல்லப்படும் மக்களும் அதை நம்பி விடுவார்கள் எனபதையும் புரிந்து கொள்ளுங்கள்.

இது எல்லாம் சோதிட பார்வையில் சொல்ல வரும் செய்திகள் தான், இது சோதிட ஆர்வலர்களின் ஆய்வுக்கும் அறிவுக்கும் தரப்பட்ட சிந்தனை என்பதை கருத்தில் கொண்டு சிந்தியுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 26 -

நம்ம வீட்டில் கூட பார்த்திருப்போம். சிலருக்கு நைட் ஷிப்ட் வேலையாக இருக்கும். அது சாப்ட்வேர், , BPO, KPO போன்ற ஐடி துறை சார்ந்தவர்களாக இருப்பார்கள்.

இவர்களுக்கு பகல் எல்லாம் இரவு.. இரவெல்லாம் பகல். அந்த நாட்டில் உள்ளவர்களுக்காக இவர்கள் தங்களை அப்படி மாற்றி கொண்டு தங்கள் வேலையை செய்ய வேண்டியது உள்ளது.. வயிற்றை கழுவ வேண்டுமே என்பதை விட கை நிறைய சம்பளம் கிடைக்கிறதே என்ற ஆசையும் தான் கரணம்.

அதெல்லாம் சரி. இப்படி இயற்கைக்கு மாறாக இந்திய இளைஞர்கள் இருப்பது ஆரோக்கியமான ஒன்று தானா என்பது சிலருக்கு கேள்வியாக இருக்கும்.

உண்மை தான் இயற்க்கைக்கு மாறாக இப்படி செய்வது சில உடலியலில் சில குறைபாடுகளை உருவாக்கும். அதை மருத்துவர்கள் சொல்லுவார்கள் என்றாலும் இதை சரி செய்ய ஏதாவது பிராயச்சித்தம் சொல்ல வேண்டாமா என்று கேட்க வருவது புரிகிறது.

சோதிட ரீதியாக கேது 12ம் இடத்தில் இருந்தாலும் 12ம் அதிபதியுடன் தொடர்பு கொண்டு இருந்தாலும் அவர்களுக்கு நைட் ஷிப்ட் வேலை இருக்கும். அல்லது பகல் எல்லாம் தூங்கி விட்டு இரவில் செல் போனை தடவிக் கொண்டு இருப்பார்கள்.

இது போல நைட் ஷிப்ட் வேலை செய்பவர்களுக்கு தேக பலம் குறையும். நோய் எதிர்ப்பு சக்தியை கூட்ட மருந்து என கூட விற்பனை செய்யலாம். ஆண்மை குறைவு ஏற்படும் என ஐடி வளாகத்தில் இனி சில லேகியம் கூட விற்க தொடங்கி விடுவார்கள். இது சரியா தவறா என்று சொல்வதை விட....

நம்மிடம் இருக்கும் ஒரு மூலிகை ரகசியத்தை இளைய பட்டாளத்திற்கு சொல்லி விட்டால் பத்து ரூபாயில் கிடைக்கும் ஒரு பலனை பல நூறு கொடுத்து ஆன்லைனில் வாங்க வேண்டுமா என்று யோசிக்க தொடங்கி விடுவார்கள் இல்லையா.

இந்த நட்சத்திரத்திற்கு இன்ன மரம் என்று சொல்வது போல இந்த மரத்திற்கு எந்த நட்சத்திரமும் கிடையாது. .ஏன் என்றால் ஒன்பது கிரகமும் குடி கொண்டு இருக்கும் ஒரே மரம் இது தான்..

வேர், இலை, தண்டு, பட்டை, பூ, பிசின், காய், என அனைத்தும் பலன் தரும் பொக்கிஷம் தான் இந்த மரம்..

அட என்னங்க ஐயா, இத்தனை பில்ட் அப் கொடுக்கறீங்க... அது என்ன மரம் தான் என்று சொல்லிவிடுங்களேன் என்று கேட்க வரும் உங்கள் ஆர்வம் புரிகிறது.. உங்களுக்கு சொல்லாமலா..

அது தான் முருங்கை மரம்.. அட.. முருங்கை காய் என்று சொல்றீங்க புரிகிறது.. அதுக்கு தான் அத்தனை பில்ட் அப்..

*சொல்லும் நோய்களுக்கு எல்லாம் தோஷம் இல்லை-ஐயம் அறும்*
*பல் உயிருக்கும் தாது மிகும். பத்தியமாம் - வில்லார்*
*பெருங்கைக்க மென்று திக்கும் பெண்ணே! நறிய*
*முருங்கைக்காய் தன்னை மொழி.*

என்பது தமிழ் கூறும் பாடல். எல்லா நோய்க்கும் மருந்து இந்த முருங்கை என்று தமிழ் சொன்ன பிறகு இதை இளசுகள் ஒதுக்கி தள்ளலாமா?

இந்த முருங்கை பூ ஒரு கிலோ என்ன விலை என்று ஆன்லைனில் தேடி பாருங்க.. மயக்கமே வந்து விடும்.. அந்த விலைக்கு விற்கும் இதன் அரிய ரகசியம் தெரிந்து கொள்ள வேண்டாமா?

சூரிய கிரகத்தின் காரகத்துவம் கொண்ட இந்த முருங்கை பூ, கண் பார்வைக்கு நல்லது. இரவில் கண் விழித்து இருப்பவர்கள் கணினி திரையை பார்ப்பவர்கள் நீல நிற ஒளி கற்றை பொருத்திய கண்ணாடியை அணிந்து இருப்பார்கள் இது விலை கூட தான்.. அந்த வேலையை இந்த முருங்கை பூ செய்கிறது.

என்ன தான் காதல் திருமணம் செய்து கொண்டாலும், உறவு என்ற நிலையில் ஈடுபாடு அல்லது ஆர்வம் இல்லை என்றால் என்ன பயன்? அதை நேர் செய்வது தான் இந்த முருங்கை பூ. அதனால் ஆன்லைனில் அந்த விலை விற்கிறார்களா? என்று வியப்பாக உங்களுக்கு இருக்கும்.

ஒரே இடத்தில் பல மணி நேரம் உட்கார்ந்து இருப்பதால் சிலர் சிறுநீர் கழிக்கும் உணர்வு வந்த பின்னும் வேலை முக்கியத்தில் இயற்கை உபாதைகளுக்கு முக்கியத்துவம் தர மாட்டார்கள். பின்னாளில் கிட்னி பிரச்சனை வரும். உலக அளவில் அதிக தேவை உள்ள ஒரே மனித உறுப்பு கிட்னி தான் என்பது நம்மில் பலருக்கும் தெரிந்து இருக்கும் அல்லவா... அவர்களுக்கும் நம்ம முருங்கை தான் முதலில் வந்து முதல் உதவி செய்யும்.

இரவில் அதிக நேரம் விழித்து இருந்தால், உடல் சூடாகும். தலைவலி, அஜீரணம், மலச்சிக்கல் என வரும் வரிசையாக சொல்லலாம்.. சுவரை விற்று சித்திரம் வாங்குவது போல தன்னை வருத்தி பணத்தை சேர்த்தால் அனுபவிப்பது யார்? (மருத்துவர்களும் மருத்துவ மனையும் தானே) இவர்களுக்கு தான் எளிமையாக கிடைக்கும் இந்த மூலிகை முருங்கை. ஒரு முருங்கைக்காய் போதும் என்றவுடன் அதெப்படி சார் ஒரு காய் என்று கேட்பார்கள்.

அவ்வளவு பெரிய சிக்கலுக்கு ஒரு கிராம் அளவு கூட இல்லாத ஒரு சின்ன மாத்திரை மருத்துவர் கொடுத்தால் பேசாமல் விழுங்கும் நம்மவர்கள் நம்மை கேட்பதற்கு காரணம் விளக்கம் நம்மிடம் உள்ளது என்பதால் தானே.

இன்ன இடம் என்று இல்லாமல் எல்லா இடத்திலும் வளரும் ஒரு மரம் இந்த முருங்கை. உங்கள் வீட்டில் கொஞ்சம் இடம் இருந்தால் கூட போதும் ஒரு மரத்தை வைத்து விடுங்கள்.. பிளாட்டில் பதினெட்டாவது மாடியில் இருந்தால் கூட நடை பாதையில் ஒரு மரத்தை வைத்து விடுங்கள்.

அதிகம் வேர் விடாத மரம். இந்த ஒரு மரம் இருந்தால், உடலுக்கு நோய் இல்லை என்பது மட்டும் அல்ல. ஒன்பது கிரகமும் நம் வீட்டில் சொல்வதை செய்யும். கிளையை உடைத்து வைத்தால் கூட வளரும் இந்த மரம் இனி உங்கள் வீட்டில் இருக்கட்டும்.

இலையை சூப் வைத்து குடிக்கலாம். செவ்வாய் காரகத்துவ பலம் கிடைக்கும். காயை குழம்பில் போட்டு சாப்பிடலாம் சனியின் காரகத்துவ பலம் கிடைக்கும். பூவில் சூரியனும் வேரில் புதனும், பட்டையில் வியாழனும், முருங்கை பிசினில் சுக்கிரனும், முருங்கை தேனில் சந்திரனும் என்று ஒன்பது கிரகமும் ஒன்றாக இருக்கும் ஒரு மரம் இந்த முருங்கை.. என்பதை தெரிந்து கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 27 -

எந்த ஒரு வழிபாட்டுக்கு முன்பும் கணபதி வழிபாடு செய்வது இந்துக்களில் பெரும்பாலருக்கும் வழக்கம்.. முழு முதற் கடவுள் கணேசன் என்பதால் விநாயகர் வழிபாடு அவசியம் என்பது பலருக்கு தெரிந்து இருக்கும்.

அவர் முதல் கடவுள் அவருக்கு தான் முதலில் பூஜை எல்லாம் சரி தான். ஆனால், அவரை எப்படிங்க முதற்கடவுள் என்று சொல்றாங்க என்று உங்களில் யாருக்காவது கேட்க தோன்றுகிறதா?

சின்ன குழந்தையாக இருக்கும் போது இப்படி கேள்வி கேட்டால், சும்மா துடுக்கு தனமாக கேட்க கூடாது பெரியவங்க சொன்னால் கேட்க வேண்டும் என்று சொல்லி நம்மை சிந்திக்க விடாமல் செய்து விடுவார்கள்.

இப்பவும் இன்றைய குழந்தைகள் இது போல கேள்வி கேட்பார்கள் அவர்களுக்கு நாம் பதில் சொல்ல விஷயங்களை தெரிந்து கொள்ள வேண்டுமே தவிர அவர்கள் சிந்தனையை தடுக்க கூடாது.

எந்த பூஜை செய்யும் முன்பும் விநாயகர் பூஜை செய்யவது ஏன் என்று தெரிந்து கொள்ள வேண்டாமா? புது மனை புகுதல், வீட்டை புதுப்பித்தல் அல்லது வேறு எந்த செயலுக்கு முன்பும் கணபதி ஹோமம் என சொல்லிக் கொண்டே போகலாம்..

உங்களுக்கு தெரியும் மனித வாழ்வுக்கு முக்கியம் நீர் தான். ***“நீரின்றி அமையாது உலகு”*** என்பது திருக்குறள். எல்லா உயிரினங்களுக்கும் முக்கியம் நீர் மட்டுமே என்றால் இதை மறுப்பவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள் இல்லையா? அறிவியல் கூட இந்த உலகம் 71% நீர் 29% நிலத்தால் அமைந்தது என்று தானே சொல்லுகிறது.

அது சரிங்க விநாயகருக்கும் நீருக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. ஆகஸ்ட் மாதம் 12ம் தேதி உலக யானை தினமாக கொண்டாடப் படும் இந்தியாவில், யானை உருவம் கொண்ட தெய்வம் விநாயகர், யானைக்கு நீர் என்றால் பிடிக்கும். நீர் நிலைகளை கண்டால், யானை சிறு பிள்ளை தனமாக ஆட்டம் போட தொடங்கி விடும். நீண்ட தூரம் நீச்சல் அடிக்கும் பாலூட்டும் விலங்கு யானை தான். அதுவும் 6 கிலோமீட்டர் தொலைவில் உள்ள நீரை யானை அறிந்து கொள்ளும்.

அந்த அளவுக்கு அறிவு திறன் படைத்த யானை உருவம் கொண்ட பிள்ளையார் தான் நீர் மூலாதாரத்திற்கு தொடர்பு உடையவர் என்றால் ஆச்சரியமாக உள்ளதா?

நீர் தான் முதல் என்பதால் தான் பிள்ளையாருக்கு முதல் பூஜை என்று வைத்திருக்கும் நமது சான்றோர் அறிவுத்திறனை எண்ணி வியக்காமல் இருக்க முடியுமா என்ன? அறிவியலை ஆன்மிகத்தில் வைத்து அப்படியே பழக்க படுத்தி விட்டார்கள்.

ஆனால், இந்துக்கள் என சொல்லும் சிலருக்கு, விநாயகர் சதுர்த்தி விழா என்று தலையில் ஒரு ரிப்பனை கட்டிக் கொண்டு விநாயகரை தண்ணீரில் தூக்கி மூழ்கடிப்பது மட்டுமே தெரிந்து இருக்கும்.

எங்கெல்லாம் நீர் நிலைகள் உள்ளதோ அங்கெல்லாம் ஒரு விநாயகர் சிலை வைத்து விடுவார்கள். அரச மரத்து விநாயகர் என்று சொல்லும் நாம் அரச மரம் நீர் வளம் நிறைந்த செழிப்பான இடத்தில் தான் வளரும். அதனால் தான் ஆற்றங்கரை விநாயகர், அரச மரத்து விநாயகர் என சிறப்பாக வழிபட படுகிறார்.

விநாயகர் சதுர்த்தி என்றதுமே, நிவேதனத்திற்கு நாவல் பழமும், விளாம்பழமும் முதலில் வந்து நிற்கும். பிள்ளையாருக்கு மாலை எருக்கும் பூ தான், சரி இதில் என்ன புதுசா தகவல் என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது.

நாவல் மரமும், விளா மரமும், நிலத்தடி நீர் எங்கே அதிகம் உள்ளதோ அங்கே தான் வளரும். இது போன்ற நீர் வளம் தேடும் மரங்களை சாஸ்திர நூல்கள் குறிப்பிட்டு காட்டுகின்றது. ஆக ஜலநாடி ஓடும் இடங்களில் எல்லா மரத்தடியிலும் பிள்ளையாரை வைத்து வழிபடும் நம்மவர்கள் நீரின் ஆதாரத்தை முதன்மை படுத்தவே இதனை செய்து இருக்கிறார்கள்.

சாஸ்திரப்படி, நாவல் மரம் இருக்கும் இடத்தில் இருந்து கிழக்கே நான்கு அடி தொலைவில் நிலத்தடி நீர் இருக்கும். நாவல் மரத்திற்கு பக்கத்தில் எறும்பு புற்று இருந்தால், மரத்திற்கு தெற்கே 12 அடி ஆழத்தில் நீர் வளம் பெருகும். இது போல ஒவ்வொரு மரத்திற்கும் ஒரு குறிப்பிட்ட விளக்கம் சொல்லி இருக்கிறது.

அப்போ அந்த எருக்கு என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அது தான் இந்த வார சிந்தனை. எருக்கு நீர் இல்லாமலே 12 ஆண்டுகள் கூட வளரும். அதனால் தான் நீரை தன்னகத்தில் வைத்து இருக்கும் விநாயகருடன் ஒட்டி அது உறவாடுகிறது.

கங்கையை தலையில் கொண்ட சிவ பெருமானுக்கு எருக்கு தான் அஷ்ட புஷப்ங்களில் ஒன்றாக இன்றும் வழிபாடு செய்யபடுகிறது. நாம் அனைவருக்கும் தெரிந்த கோளறு பதிகத்தில்

> *பலபல வேடம் ஆகும் பரன் நாரி பாகன் பசுஏறும் எங்கள் பரமன்*
> *சலமகளோடு "எருக்கு" முடிமேல் அணிந்து என் உளமே புகுந்த அதனால்*
> *மலர்மிசையோனும் மாலும் மறையோடு தேவர் வரு காலம் ஆன பலவும்*
> *அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல அடியார் அவர்க்கு மிகவே.*

என்ற பாடலில், "எருக்கை' இறைவன் முடிமேல் அணிந்து இருப்பதாகவும் கங்கையை தலையில் கொண்ட இறைவன் என பதிக பாடலில் வருவதாலும், நீர் விரும்பும் தாவரங்களில் எருக்கும் உண்டு என்பதை புரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

இந்த கோளறு பதிகம் முழுவதும் நீரின் முக்கியத்துவத்தை வைத்து தான் அமைந்துள்ளது என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

அதனால் தான் நவக்கிரக பிரச்சனை உள்ளவர்கள் இந்த கோளறு பதிகம் பாட வேண்டும் என்று சொல்லுவார்கள்.

கேது கிரகத்தினால் ஏற்படும் சிக்கலுக்கு பிள்ளையார் வழிபாடும் முக்கியமாக சொல்லப்படுகிறது.

வாய்ப்பு கிடைப்பவர்கள் கட்டாயமாக எருக்கு வளர்க்க வேண்டும். எருக்கு வளர்க்க கூடாது என்று சொல்லி நம்மை வேறு பக்கம் திசை திருப்பி வைத்து இருப்பார்கள் அவைகளுக்கு செவி கொடுக்காமல் எருக்கத்தம்புலியூர் என்பது தேவார பாடல் பெற்ற திருத்தலம், என்பதை புரிந்து கொண்டு நீர் வளத்தின் முக்கியத்துவத்தை புரிந்து கொள்ளுங்கள்.

எருக்கு, நமக்கு இருக்கு என அழுத்தமாக சொல்லுங்கள்.

மற்ற சடங்குகளில் கூட நீரை வைத்து தான் சடங்கு செய்கிறோம் என்பதால் பிள்ளையார் வழிபாட்டை புரிந்து கொண்டு நீர் வளம் காப்போம் நிறைவான வாழ்வை பெறுவோம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 28 -

சிறு பிள்ளைகளாக இருக்கும் போது நாம் திருக்குறள் படித்து இருப்போம். இது வரை எத்தனை திருக்குறள் படித்து இருப்பீர்கள். அதில் எத்தனை திருக்குறள் உங்களுக்கு தெரியும் என்று கேட்டு பாருங்கள். நமக்கே வெட்கமாக இருக்கும்.

திருக்குறள், சொல்கிறபடி வாழ்கிறோமா இல்லையா தெரியாது என்றாலும், தொடக்க பள்ளியில் தொடங்கி, கல்லூரி படிப்பு வரை ஆண்டு தோறும் திருவள்ளுவர் நம்முடனேயே வருவார்.. அப்போதெல்லாம் தமிழை நாம் பாட மொழியாக வைத்து இருந்தோம். இன்றைய நிலை அப்படி இல்லை என்பது வருத்தத்திற்கு உரியது தான்.

இரண்டு வரி குறளுக்கு இரண்டு மதிப்பெண் தான் கிடைக்கும் என்றாலும், அதை எப்படியாவது படித்து மனப்பாடம் செய்து இரண்டு வரி எழுதி விட வேண்டும் என்று ஒரே மூச்சாக இருப்போம்.

அதில் ஒரு கஷ்டமான சொல்ல தெரியாமல் டீச்சரிடம் அடி வாங்கிய ஒரு குறள்,

*பரியது கூர்ங் கோட்டது ஆயினும் யானை*

*வெரூஉம் புலி தாக்குறின்.*

அதெல்லாம் சரிங்க இதையெல்லாம் ஏன் இப்போ நினைவு படுத்தறீங்க என்று மனதிற்குள் ஒரு கேள்வி வரலாம். அதை சொல்வதற்கு தான் இந்த வார சிந்தனை.

என்னது திருக்குறளுக்கும் சோதிடத்திற்கும் தொடர்பா? என்று புருவத்தை உயர்த்த வேண்டாம். பல திருக்குறள்களில் சோதிட செய்தி

புதைந்து உள்ளது அதை வாய்ப்பு கிடைக்கும் போது ஒவ்வொன்றாக சிந்திப்போம்.

சரி இந்த குறளில் என்ன சோதிட சிந்தனை என கேட்க போறீங்க.. நமக்கெல்லாம் தெரியும் நீச பங்க ராஜ யோகம்.. அட ஆமாங்க இது பலரும் பொதுவாக பயன்படுத்தும் யோகங்களில் ஒன்று தானே.

இந்த குறளில் யானை, புலி என இரண்டு விலங்குகள் உள்ளன. அவை இரண்டிலும் ஊக்கம் அதிகமாக உள்ளது வெற்றி பெறும் என்று சொல்ல வந்த செய்திதான் தான் இந்த குறள் சிந்தனை.

இதில் என்ன குறிப்பு செய்தி என்றால், மற்ற விலங்குகள் அல்லது செய்தியை சொல்லாமல், புலி யானை இரண்டையும் சொல்லி, அதில் உருவத்தில் பெரிய யானையை விட ஆற்றல் மிக்க புலி ஜெயித்து விடும் என்று சொல்லி இருப்பதில் தான் சோதிட சூட்சுமம் உள்ளது.

இதில் யானை என்பது குரு, ஆற்றல் மிக்க செவ்வாய் புலி, சோதிடத்தில் இருவரும் நட்பு கிரகங்கள் தான். ஆனால், இங்கே வெற்றி பெறுபவர் ஊக்கமுடைய புலி என்று வள்ளுவம் சொல்கிறது இது தான் சூட்சுமம்.

இப்போ சோதிட சிந்தனைக்கு வருவோம்.

ஒரு கிரகத்தின் உச்ச நிலையில் இருந்து அதன் ஏழாமிடம் நீச்சமாக இருக்கும், என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும். அந்த வகையில், குரு கடகத்தில் உச்சம், மகரத்தில் நீசம், அதே போல செவ்வாய் மகரத்தில் உச்சம் கடகத்தில் நீச்சம்.

இதில் மகரம் என்பது நில ராசி, கடகம் என்பது நீர் ராசி, புலி நிலத்தில் யானையை வென்று விடும், நீச்சலில் அதிக வலிமை படைத்த யானை நீரில் புலியை வென்று விடும். இந்த கிரகங்களின் உச்ச நீச தன்மையை இதிலிருந்து புரிந்து கொள்ளலாம்.

இந்த இரண்டு கிரகமும் ஒன்றாக சேர்ந்து அது கடகத்திலோ, மகரத்திலோ இருந்தால், அது நீச பங்க யோகத்தின் அமைப்பில் வரும் இல்லையா. நீச பங்கம் என்பது, உச்சமான கிரகத்துடன் நீசமான கிரகம் சேரும் போது, அல்லது பார்வை பெறும் போது, நீச பங்க ராஜ யோகம் ஏற்படுகிறது. இது மட்டுமே நீச பங்க ராஜ யோகம் இல்லை என்றாலும் சிந்தனைக்கு ஏற்ப இதை மட்டும் எடுத்து சிந்திப்போம்.

இந்த நீச பங்க ராஜ யோகம் பலன் தர வேண்டும் என்றால் லக்கினாதிபதி வலு பெற வேண்டும், போன்ற அடிப்படை செய்திகள் சில உள்ளது என்பதை நீங்களும் அறிவீர்கள்.

புலி வலு இழந்து யானை வலு பெறுவது, நீரில், (நீர் ராசியான கடகத்தில் குரு உச்சம், செவ்வாய் நீசம் ) யானை வலு இழந்து புலி வலு பெறுவது நிலத்தில் (நில ராசியான மகரத்தில் செவ்வாய் உச்சம், குரு நீசம்)

இந்த நீச பங்க யோகத்தில், ஒரு கிரகம் முழுமையான நீசம் பங்கம் அடையும் போது, பலனில் தரும் வலிமையை விட அதிக வலிமை பெற்று பலன் தரும் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

புரிதலுக்காக, வெளிப்படையாக சொல்ல வேண்டும், என்றால், இங்கே புலி தாக்கினால், யானை தோற்று போகாது, ஆனால் பயத்தில் இருக்கும், அது மீண்டு வந்து புலியை தாக்கும் என்ற நீச பங்க யோகத்தின் சூட்சுமத்தை இந்த குறளில் புகுத்தி வைத்து இருப்பது தான் இந்த வார சிந்தனையின் உச்சம் என்பதை புரிந்து கொண்டால் மகிழ்ச்சி.

ஆக ஒரு இரண்டடி குறளில், இத்தனை பெரிய சோதிட சிந்தனையை வைத்து செய்து இருக்கிறது தமிழ் என்று சிந்திக்கும் போது, வியப்பாக இருக்கிறது அல்லவா?

ஆக, இந்த குறள் சிந்தனையில் இப்படி ஒரு சோதிட சிந்தனையா என்ற எண்ணம் வந்து இருக்கும். உண்மை தான் அதனால் தான்

தமிழில் இல்லாதது எதுவும் இல்லை எனவும், நமது சோதிட பரிகார முறைகள், தமிழிலேயே இருக்கும் என்றும் வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் சொல்லிக் கொண்டு வருகிறோம்.

ஒரு சொல், அதாவது வாக்கு எப்படி உருவாகிறது அது எப்படி வெளிப்படுகிறது என்ற சிந்தனையை சாத்திர கண் கொண்டு சிந்தித்தால் தமிழின் பெருமையும், உயர்வும் நமக்கு புரியும்.

இன்றும் சில வீட்டில் உள்ள பிள்ளைகள், தமிழில் பேசுவார்கள் ஆனால் எழுத படிக்க தெரியாது, இன்னும் சில பிள்ளைகள் தமிழே தெரியாது, இரண்டாவது மொழி கூட ஆங்கிலம் பிரெஞ்சு போல எடுத்துக் கொள்வார்கள்.

இரண்டுமே சரியில்லை என்றாலும் பின்னதை விட முன்னது பரவாயில்லை என்று சொல்லும் நிலையில் இருக்கிறோம்.

குருவும் செவ்வாயும் சேர்ந்தால் அது குரு மங்கள யோகம் அது பற்றி இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

வாசக அன்பர்களுக்கு ஒரு அன்பான வேண்டுகோள், உங்கள் பிள்ளைகளுக்கு, அல்லது உங்களுக்கு தெரிந்த பிள்ளைகளுக்கு, தமிழ் முறையாக சொல்லிக் கொடுங்கள். இது வருமானத்திற்காக அல்ல. வாழ்க்கைக்காக. இப்படி செய்ய வாய்ப்பு இல்லையா..? பரவாயில்லை, திருக்குறளை மட்டுமாவது சொல்லிக் கொடுங்கள்.. வாழ்க்கை வளமாகும். எல்லா நலனும் கிடைக்கும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 29 -

ஜோதிடம் என்றதுமே, நமக்கு என்ன நடக்குமோ என்ற எதிர்பார்ப்பும், குரு பெயர்ச்சி, சனி பெயர்ச்சி, ராகு கேது பெயர்ச்சி என ஆண்டு முழுவதும் வருகிறதே.. நமக்கு இது இப்படி நடந்து விட கூடாதே, என்ற பயமும் அநேகமாக எல்லோருக்கும் இருக்கும்.

இதில் இப்படி வர போகிறதே என்று சோதிட ஆலோசனை பெறாமல் சிலர் எதையாவது தொடங்கி விட்டு, அப்புறம் அது தீர வேண்டுமே என ஆலோசனைக்கு வந்து நிற்ப்பார்கள்.

நமக்குள்ள இந்த பிரச்சனை தீர வேண்டுமே என்று சிலர் நவக்கிரக வழிபாடு செய்வார்கள். அதிலும் சிலர் நவகிரங்கங்களுக்கு ஒன்பது சுற்று சுற்றுவார்கள். இன்னும்சிலர் அதில் ஒரு சுற்று தலைகீழாக ராகு கேதுவுக்கு என்று சுற்றுவார்கள்.

சிலர் சனிக்கு எள்ளு பொட்டலம், நவதானியத்தில் விளக்கு என அவரவர்கள் ஒன்றை செய்து கொண்டு இருப்பார்கள். இன்னும்சிலர் இதை பார்த்து நாமும் இப்படி செய்ய வேண்டும் போல என்று பழக்கத்திற்கு கொண்டு வந்து விடுவார்கள்.

இதெல்லாம் சரியா? இதனால் பலன் கிடைக்குமா? என்று எப்போதாவது சிந்தித்து பார்த்தது உண்டா?

பல கோவில்களில் நவகிரகங்கள் ஒன்றை ஒன்று பார்த்த படி இருக்காது. ஜாதக கட்டத்தில், ஒன்றை ஒன்று பார்க்காமல், ஒன்றை ஒன்று இணைவு பெறாமல், எப்படி கிரக பலனை சொல்ல முடியும்? அது முடியாது என்றால், இந்த வழிபாடு பலன் தருமா என்று சிந்திக்க தோன்றுகிறதா? சரி இப்போ தான் விழித்துக் கொள்ள தொடங்கி விட்டீர்கள்.

அப்படின்னா நவக்கிரக வழிபாடு செய்யவே கூடாதா? அல்லது எப்படி செய்ய வேண்டும் என்ற வழிமுறைகள் உள்ளதா என்று கேட்க தோன்றும். சரி தான்.

கோவில்களில் புறத்தே தான் நவகிரகங்கள் இருக்கும், பல முறை சொல்லி உள்ளது போல, நவகிரகங்கள் தன்னிச்சையாக எதுவும் செய்யாது அல்லது செய்ய முடியாது. அவைகள், ஆண்டவன் கட்டளைகளை நிறைவேற்றும் அதிகாரி போல செயல்படும். அவ்வளவு தான்.

நவகிரங்களுக்கு ஒரு வணக்கம் வைத்து விட்டு போக வேண்டும் அவ்வளவு தான். வணக்கம் வேறு வழிபாடு வேறு. குறிப்பாக சொல்ல வேண்டும் என்றால், நவகிரங்களில் தலைமை கிரகம் சூரியன் என்பது நமக்கு தெரிந்து இருக்கும்.

ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒரு portfolio என்பது போல சூரியன் தான் தலைமை கிரகம். இறைவனிடம் இருந்து ஆணை பெற்று வந்து மற்ற கிரங்களுக்கு கட்டளை இடும் மிடில் லெவல் மேனஜர் என்பது போல புரிந்து கொள்ளுங்கள்..

அதனால் தான் சூரியன் மற்றும் சந்திரனை கிரகண காலத்தில் ராகு கேது பிடிப்பதாக நமக்கு சொல்லி தந்து இருப்பார்கள். ராகு கேது இயல்பு தான் உங்களுக்கு தெரியுமே..!!

எனவே தலைமை கிரகமான சூரியனை நோக்கி வணங்கியபடி இருக்கும் நவகிரக தலத்தில் வழிபாடு செய்தால் மட்டுமே நவக்கிரக வழிபாடு செய்த உணர்வு கிடைக்கும்.

அதை விடுத்து இத்தனை சுற்று என்ற எண்ணிக்கையில் நவக்கிரகத்தை சுற்றி வந்தால், உடல் எடை வேண்டுமானால் குறையலாம். இதே போல ராகு கேதுவுக்கு என ஒரு சுற்று இடமாக வலம் வருதல் சாஸ்திர விரோதம். அப்பிரதக்ஷனமாக வர கூடாது என்பதை சொல்லித்தானா தெரிய வேண்டும்.

சரி நவக்கிரங்கள் சூரியனை நோக்கி இருக்கும்படியான தலங்கள் எங்கள் பக்கத்தில் இல்லையே என்ன செய்வது என சிலர் கேட்கலாம். அல்லது எங்கள் பக்கத்தில் உள்ள கோவில்களில் இப்படி சூரியனை நோக்கி மற்ற கிரகங்கள் இருப்பதாக இருக்கிறது. மற்ற கோவில்களில் இது போல இல்லையே இது தவறோ என்று நாங்கள் வழிபாடு செய்வதில்லை என்று கேட்பவராக கூட இருக்கலாம்.

அவர்களுக்கு தான் இந்த செய்தி. கிரக வழிபாடு செய்ய அந்த கிரகத்திற்குரிய அதிதேவதைகளை வழிபாடு செய்தாலே போதும். பலன் கிடைத்து விடும். எதை எப்படி செய்ய வேண்டும் என்ற வழிமுறைகளோடு செய்தால், செய்வன திருந்த செய்ய முடியும் அதனால் பலனும் கிடைக்கும்.

“***அவன் கால் பட்டு அழிந்தது என் தலைமேல் அயன் கையெழுத்தே***”

என்று அருணகிரிநாதர் அடிக்கோடிட்டு சொன்ன பிறகும் நம்பிக்கை இல்லை என்றால் என்ன செய்வது.

நவகிரங்களுக்கு ஆணை பிறப்பிப்பவன் ஆண்டவன்.. ஆணை போட்டவர்களால் மட்டுமே ஆணையை திரும்ப பெற முடியும் அல்லது மாற்றி எழுத முடியும் என்பதை இன்றைய நடைமுறையில் அனுபவத்தில், பார்த்து இருப்போம்.

அதனால் ஆணையிட்ட இறைவனிடம் முறையிட்டால், அதற்கான பலனும் பயனும் கிடைக்கும்.

அனுபவம் பெற்ற சோதிடர், அந்த ஆணையினை ஜாதகத்தில் உள்ளபடி படித்து பலன் தருவார், கூடவே பரிகாரமும் சொல்லுவார். செய்த வினைகளுக்கு கழுவாய் இல்லை என்றால் இறைவன் கருணை இல்லாதவன் என்பது போல ஆகி விடும் இல்லையா.

"***அவை நல்ல நல்ல அடியார் அவர்க்கு மிகவே***" என்று சம்பந்த பெருமான் கோளறு பதிகத்தில் குறித்து சொல்லி இருப்பதும்,

"***அல்லல் என் செய்யும், அருவினை என் செய்யும்***" என அப்பர் தேவாரத்தில் சொல்லி இருப்பதும்,

""***வான நாடனே வழித்துணை மருந்தே***" என சுந்தரமூர்த்தி சுவாமிகளும்,

"***நாள் என் செய்யும், வினை தான் என் செய்யும்***" என கந்தர் அலங்காரமும்,

"***மாதமும், தின, வாரமும், திதி, யோகமும், பல நாள்களும், படர்மாதிரம் திரி கோள்களும், கழல் பேணும் அன்பர்கள் பால் நலம் தர***" என பாம்பன் சுவாமிகளும்,

"***ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழாது உஞற்று பவர்***" என்று திருவள்ளுவரும் சொன்ன பிறகும் நமக்கு நம்பிக்கை வர வேண்டாமா?

உங்களுக்காக ஒரு குறிப்பு செய்தி சொல்கிறேன், சரியாக உள்ளதா சொல்லுங்கள்.

திருச்சி மாவட்டத்தில் உள்ள பல கோவில்களில், நவகிரகங்கள் சூரியனை பார்த்தபடி வணங்கிய திருக்கோலத்தில் இருக்கும்.

கந்தர் சஷ்டி கவசம் அரங்கேறிய தலமான, சென்னிமலை முருகன் கோவிலில் நவகிரகத்தில் செவ்வாய் கிரகமே இருக்காது.

இது போன்ற சில அடிப்படை உண்மைகளை புரிந்து கொண்டு, உங்கள் பகுதியில் உள்ள திருக்கோவில்களில் நவக்கிரகங்கள் இப்படி இல்லை என்றால் அதற்காக வருந்த தேவையில்லை, முன்பு சொன்னது போல கிரகங்களின் அதி தேவதைகளை வழிபாடு செய்து பலன் பெறுங்கள்..

அடுத்து சில மாதங்களில். வரவுள்ள சனிப்பெயர்ச்சி எப்படி இருக்க போகிறது. இதில் பலன் பெறுபவர்கள் யாரு, பலம் இழப்பவர்கள் யார் என்பதை வரும் வாரங்களில் சிந்திப்போம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 30 -

“கொடு” என்பவர்களை விட, “எடு” என்பவர்கள் இன்றைய நாளில் அதிகமாகிவிட்டது. கொடுக்காதவர்களை, கொடுமைக்காரன் என்றா சொல்வது.

இறந்தவர்களுக்கு திதி அல்லது தர்ப்பணம் தர வேண்டும் என்று சொன்னால், பலரும் அதனை செய்யாமல், அதற்கு காரணம் தேடுகின்றனர். மக்கள் மத்தியில் மாற்றம் வந்து விட்டது.

ஜீன்ஸ் போட்டால் பொண்ணு, சுடிதார் போட்டால் ஆண்டி, சேலை கட்டினால் பாட்டி என சேர்த்து சொல்லும்படி காலம் மாறி விட்டது. ஒட்டிக்கோ கட்டிக்கோ என உடைகள், நாகரீகம் என்ற பெயரில் உலா வந்து கொண்டு இருக்கின்றன.

காலத்திற்கு ஏற்ப வாழ பழக வேண்டும் என்பதில் மாற்று கருத்து இல்லை என்றாலும், இன்றைய இளைய செல்லங்களுக்கு நமது தமிழ் கலாச்சாரத்தை சொல்லி புரிய வைக்க வேண்டாமா? என்ற ஏக்கம் தான் இது போன்ற சிந்தனைகளை எழுத வைக்கிறது.

இன்றைய நாளில் இப்படி இளைய தலைமுறைகள் அறிவு பூர்வமாக ஏற்றுக் கொள்ளும்படி சொல்லி தருபவர்களும் இல்லை. அதனால் அதை கேட்டுக் கொள்பவர்களும் இல்லை. தவறுகளும் தவற விட்டவைகளும் இருபக்கமும் உள்ளது. நாமும் இதை இப்படியே விட்டு விட முடியுமா என்ன?

இப்போ பாருங்கள் மாஹலய பக்ஷம் தொடங்கி விட்டது. மாஹலய பக்ஷம் என்பது, புரட்டாசி மாத அமாவாசைக்கு முந்தைய பதினைந்து நாட்கள். அதை தொடர்ந்து மகாளய அமாவாசை அடுத்த வாரத்தில் வர இருக்கிறது. இந்த பதினைந்து நாட்களில், செய்ய வேண்டிய சடங்குகள், அதனால் கிடைக்கும் பயன்கள், எப்படி

இறந்தவர்களுக்கு, எப்போது இந்த திதி தர வேண்டும் என சொல்ல தொடங்கினால் ஒரு சில பக்கம் போதாது.

அது தொடர்பான சில சிந்தனைகளை தேவைக்கு ஏற்ப உங்களுடன் பகிர்ந்து கொள்வதின் மூலம் மற்றவர்களுக்கு அறிய செய்வதில் இரட்டிப்பு மகிழ்ச்சி தானே..

பிறப்பு என ஒன்று இருந்தால் இறப்பு என நிச்சயமிருக்கும் தானே. கரு உருவாகி, அது திருவாக வேண்டும் என்பது தான் பிறப்பின் நோக்கம். இது இப்படியே நடக்கிறதா என்றால், அது ஒரு பில்லியன் டாலர் கேள்வியாக தான் நம் முன் வந்து நிற்கும். இது சரியும் இல்லை. தவறும் இல்லை. இருப்பதை அப்படியே ஏற்றுக் கொள்ள பழகி கொள்ள வேண்டும் இது தான் பக்குவம் வந்த மனத்தின் நிலை.

இந்த உலகில் பிறந்த எவரும் ஏதோ ஒரு வகையில் துன்பத்தை அனுபவித்துக் கொண்டு தான் இருக்கிறார்கள் என்பதை மறுத்து சொல்ல ஒருவரும் இருக்க முடியாது. அவரவர் வினை வழியே அவரவருக்கு பிறப்பு இன்ப துன்பங்கள் பேறு, இழவு, இன்பமொடு, பிணி, மூப்பு, சாக்காடு இவ் ஆறும் முன் கரு உட்பட்டது என சாத்திரம் சொல்லும். இதனை பூர்வ ஜென்ம புண்ணியம் என ஐந்தாம் பாவத்தை காட்டி சோதிடம் சொல்லும்.

கடிகாரம் தோன்றுவதற்கு முன்பு முன்னோர்கள் சூரியனை பார்த்து நேரத்தை கணித்தார்கள். அப்போ சூரியனும் தோன்றுவதற்கு முன்னால், என யோசித்து பார்த்தால் இருட்டாகவே இருக்கிறது அந்த கொடிய இருளில் கிடந்த உயிர்கள் மீது இறக்கம் கொண்டு இறைவன் அந்த உயிர்கள் உய்யும் பொருட்டு போகங்களை படைத்து கொடுத்தான்.

உடலை பெற்ற அந்த உயிர்கள் விருப்பு வெறுப்புக்கு ஏற்ப, நல்லன மற்றும் அல்லன செய்து வினையை குவித்துக் கொள்கிறது. இந்த வினை அனுபவமே பிறப்பும் இறப்புமாக வருகிறது. இந்த பிறப்பு இறப்பு உடலுக்கே அன்றி உயிருக்கு இல்லை.

நம்மில் பலரும் பிறப்புக்கு செய்யும் சிறப்பை இறப்புக்கு செய்வதில்லை. இங்கே தான் தொடங்குகிறது சிக்கல். இந்த தொடர்ச்சியில் நன்றி மறந்து நலன் கெட்டு வளம் குறைந்து என வாழ்க்கையை வாழ வேண்டிய கட்டாயத்தில் தள்ளப்பட்டு விடுவோம்.

நம்மை மீட்டு பேணி காத்தவருக்கு நன்றி சொல்ல வேண்டாமா? இந்த நன்றி தெரிவிக்கும் உணர்வு எல்லா உயிர்களிடத்தும் உண்டு. மற்ற உயிர்கள் வயிற்றுக்கு உணவு கிடைக்கும் வரை தான் நன்றி காட்டும். அப்படி நன்றி காட்டுவதால் அவை மேல் நிலை அடைகிறது. அப்படி நன்றி காட்டும் செயல் தான் பிதுரர் வழிபாடு.

சரி....!. இருப்பவர்களுக்கு தானே நன்றி சொல்ல வேண்டும். இருப்பவர்கள் அவர்கள், இறந்து விட்டால், அவர்களுக்கு நன்றி சொல்ல வேண்டுமா? அப்படி நன்றி சொன்னால் அது அவர்களுக்கு போய் சேருமா? இதெல்லாம் சும்மா சார்.. யாரோ பிழைப்பு நடத்த இப்படி ஒன்றை செய்து விட்டு போய் விட்டார்கள் என்று சிலர்.

இறந்தவர்களுக்கு தானே திதி தர வேண்டும்... அப்படி என்றால், அந்த திதி கொடுக்கும் சடங்கில் இறந்தவர்கள் பெயரை சொல்லி தானே சடங்கு செய்கிறார்கள்.. இப்போ பாருங்க சார், பெயர் உடலுக்கு தானே, அந்த உடலை தான் எரித்து அல்லது புதைத்து விட்டோமே, அப்படி எரித்து அல்லது புதைத்து விட்ட உயிர் அற்ற அந்த உடலுக்கு அதன் பெயரை சொல்லி இந்த சடங்கு செய்வது மூடத்தனம் இல்லையா என கேட்க சில கருப்பு சட்டைகள் நம் முன் வந்து நிற்கும்.

புரியாத மொழியில் என்னவோ சொல்றாங்க, புரிந்து கொள்ள நமக்கும் தெரியவில்லை. புரிகிற மாதிரி சொல்ல அவர்களுக்கும் தெரியவில்லை. என்னமோ போங்க சார், என்னோட பர்ஸை காலி பண்ண இப்படி எதையாவது சொல்லி நம்மை சிக்க வைத்து விடுங்கள் என்று சந்தேகங்களை மூட்டை கட்டிக் கொண்டு வந்து நம் முன்னாடி கொட்டுவார்கள்.

பித்ரு சாபம், பித்ரு தோஷம், பிரேத சாபம் என சோதிடத்தை பார்த்து குறிப்புகள் மற்றும் சொன்னால் சோதிடர்களையும் சேர்த்து ஒரு திட்டு திட்டி போவார்கள்.

பிறருக்கு கிடைத்தது நமக்கு கிடைக்கவில்லையே என்று பொறமை படாத ஒரே விஷயம் “மரணம்” மட்டும் தான். அந்த மரணத்தை வெல்ல யாராலும் முடியாது. எந்த அறிவியலாலும் முடியாது. ஆனால் இந்த இறப்பு சடங்கிலும் சரி, இறந்த பிறகு செய்யவேண்டிய சடங்குகளிலும் சரி, பலரும் அக்கறை கொள்வதில்லை.

இதில் அடிப்படை உணர்வு நன்றி தெரிவித்தல் தான். ஆனால் சிலர், தன்னை வளர்த்து பெயர், பதவி என வாங்கி கொடுத்த சிலரிடம் கூட நன்றி கட்டாமல் எட்டி உதைக்கும் ஈன குணத்துடன் இருப்பார்கள். இங்கே தான் தவறுகளும் சிக்கல்களும் சேருகின்றது. “நன்றி மறப்பது நன்று அன்று” என சொன்ன வள்ளுவரும், இந்த பிதுரர் வழிபாடு பற்றி சொல்லாமல் இல்லை. “தென்புலத்தார்” என்று இவர்களை சிறப்பு சொல்லி காட்டுகிறார்.,

இந்த சிக்கல்களை ஜாதகத்தில் நமக்கு அடையாளம் காட்டுபவர்கள் இருள் கிரகங்களும், ஒளிக்கிரங்களும் தான். பூர்வ புண்ணிய ஸ்தானம் என சொல்லும் ஐந்தாம் பாவகமும், சௌபாக்கியம் என சொல்லும் ஒன்பதாம் பாவகமும் தான். இந்த இடங்களில் உள்ள கிரக சேர்க்கை இந்த தோஷங்களை கோடிட்டு காட்டி விடும். இந்த தோஷங்களை பட்டியலிட்டு சொன்னால் பயமாக தான் இருக்கும்.

இந்த சிந்தனையின் தொடர்ச்சியை அடுத்த வாரம் சிந்திப்போம். இந்த மாஹலய பக்ஷத்தில் பிதுரர் வழிபாடு மட்டுமே சிந்தனையில் இருக்கட்டும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 31 -

சார் ஒரு சந்தேகம் என்று ஒருவர் வந்தார். ஒரு நிமிடம் அவர் சிந்தனையை பார்த்து வியந்து நின்றாலும், இவர்களுக்கும் புரியும்படி சொல்லித்தானே ஆக வேண்டும் என சிந்திக்க தொடங்கியது தான் இந்த வார சிந்தனை இது சென்ற வார சிந்தனையான மஹாலய பக்ஷத்தை ஒட்டியது தான்.

சோதிடம் ஒரு கடல், சாஸ்திர ஞானம் ஒரு கடல். இந்த கடலில் நீந்திக் கொண்டு இருப்பவர்கள் சந்தேகத்தை எதிர் கொள்ளாமல் இருக்க முடியுமா என்ன? கற்பதும், பின் தெளிவு பெறுவதும், சந்தேகம் எழுவதும், மீண்டும் கற்பதும் என இது ஒரு தொடர் பயிற்ச்சி பயணம்.

“இன்று புதியதாய் பிறந்தோம்” என பாரதி சொல்வது போல, இன்று புதியதாய் கற்றுக் கொண்டோம் என ஒவ்வொரு நாளும் ஒரு சிந்தனை, ஒரு அனுபவம் என அமைந்து விடுகிறது.

சரிங்க ஐயா அந்த நபர் கேட்ட சந்தேகம் தான் என்ன? சொன்னால் நாங்களும் தெரிந்து கொள்வோமே என்று காத்திருக்கும் உங்கள் ஆர்வம்புரிகிறது.

போன வாரம் மாஹலய பக்ஷம் பற்றி எழுத தொடங்கி இருந்தீங்க. ஆனால் இறந்தவர்களுக்கு மறுபிறப்பு இல்லை என்று நம்பும் சில சமயத்தை சேர்ந்தவர்களுக்கு இது எப்படி பொருந்துவனவாக இருக்கும். அறம் சொல்ல வேண்டும் என்றால் அது அனைவருக்கும் பொதுவாக தானே இருக்க வேண்டும், என தொடங்கினார்.

“அன்பு இல்லை” என்று சொல்லக் கூடிய சமயம் ஏதாவது ஒன்றை காட்டுங்கள் பார்க்கலாம், என கேட்ட அடுத்த வினாடி

வாயடைத்து போனார். எந்த சமயத்தவராக இருந்தாலும் மூன்று உண்டு.. அவை, அன்பு செலுத்துதல், நன்றி அறிதல், இறை உணர்தல்.

இதில் நன்றி உணர்தலே பித்ரு கடன். வழிபாட்டு சடங்கு முறைகள் தான். வேறே தவிர எல்லா மதத்தினருக்கும் இது உண்டு. இந்த மஹாலய பக்ஷத்தில் வரும் ஒவ்வொரு திதிகளுக்குமே ஒரு சிறப்பு உண்டு. அதற்கான பலனும் உண்டு. அதிலும் முக்கியமாக, மஹாபரணி, மத்யாஷ்டமி, அவிதவா நவமி மஹா வியாதீயபாதம் மகா திரயோதசி என.நிறையா இருக்கு.

அதனால் தான், பித்ரு தோஷம்/பித்ரு சாபம், பிரேத தோஷம்/சாபம் என சோதிடர்கள் ஜாதகத்தை பார்த்து சொன்ன பிறகு குறிப்பிட்ட திதியை குறித்து தந்து மஹாலய பக்ஷத்தில் இந்த திதியில் முன்னோர் வழிபாடு செய்ய பரிகாரமாக சொல்லுவார்கள்.

“மறந்ததை மஹாலயத்தில் விடு” என்று ஒரு சொல்லடை உண்டு. இது சொல்லவரும் பொருள் என்ன என்றால், பெற்றோர்களுக்கு அந்த ஆண்டில் திதி தர்ப்பணம் தர மறந்து விட்டால் மகாளயத்தில், (எள்ளும் தண்ணியும் வைத்து தர்ப்பணம்) விடு என்பது தான்.. இதை இன்றைய நாளில் வேறு விதமாக மாற்றி சொல்கிறார்கள்.

ஆக இதுவரை மறைந்த பெற்றோர்களுக்கு தர்ப்பணம் செய்யாமல் இருந்தாலும் இந்த மஹாலய பக்ஷத்தில் செய்தே ஆக வேண்டும். நமது கலாச்சாரத்தில் முக்கியமாக மூன்று அமாவாசைகளை குறித்து சொல்லுவார்கள், அது ஆடி அமாவாசை, தை அமாவாசை, புரட்டாசி மாதம் வரும் மஹாலய அமாவாசை என்பதே ஆகும். இது குறித்து விரிவான விளக்கங்களை இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

சரி.. இது நாள் வரையில் இதை பெரியதாக எடுத்துக் கொள்ளவில்லை. நீங்கள் சொல்வது மனதை தைப்பது போல இருக்கிறது இப்போ இந்த ஆண்டில் மகாளய பக்ஷத்திலும் மஹாலய

அமாவாசையின் போதும் திதி கொடுக்க போகிறேன் என்று சந்தேகம் கேட்க வந்தவர் வேகமாக ஆர்வமாக எழுந்தார்.

கொஞ்சம் பொறுங்கள் என்று அவருக்கு மேலும் சில செய்திகளை சொன்னேன். சிரார்த்தம் தரும் போது, உங்களுக்கு வசதியான நேரத்தில் தருவது (ஆபீஸ் போவது வீட்டில் உள்ளவர்கள் சவுகரியம் இப்படி) சரி தான் என்றாலும் அது சரியல்ல. அபாரன்ன காலத்தில் தான் சிரார்த்தம் தர வேண்டும். இதை ஒட்டி தான் மகாபரணி, மாக திரயோதசி போன்ற திதிகள் வரும்.

அபாரன்ன காலம் என்பது பஞ்ச காலங்களில் ஒன்று.ராகுகாலம் குளிகன், நல்ல நேரம், முகூர்த்த நேரம் போல சிரார்த்தம் செய்வதற்கு தரப்பட்ட நேரம் தான் இது.. பொதுவாக இது தினமும் இரண்டு மணி நேரம், தோராயமாக மதியம் 1.30 மணி முதல் இருக்கும். இந்த அபாரன்ன காலத்தில் பரணி நட்சத்திரம் வந்தால் அது மகாபரணி. இது பொதுவாக சதுர்த்தி அல்லது பஞ்சமி திதியில் வரும். ஆனால் மகாபரணி சிரார்த்தம் செய்பவர்கள் திதியை பார்க்காமல் அபாரன்னா காலத்தில் வரும் பரணி நட்சத்திரத்தை பார்த்தாலே போதும்.

அட சிரார்த்தம் செய்வதற்கு கூட நேரம் இருக்குதா என்று சந்தேகம் கேட்க வந்தவர் ஆச்சரியமாக பார்த்தார்.

இதே போல தான் எந்த தினத்தில் திரயோதசியும் மக நட்சத்திரமும் வருகிறதோ அதுவே மகா திரயோதசி என்று சொல்லி முடிப்பதற்குள் ஒரு வழியாக ஒரு பெரு மூச்சு விடும்படி இருந்தது.. அவ்வளவு விஷயம் இருப்பதால் இத்தனையும் சொல்ல வேண்டியது இருக்கிறது.

இதிலும் தனிஷ்டயில் இறந்தவர்களுக்கு என்று சிறப்பாக இந்த பக்ஷத்தில் செய்ய வேண்டும். அதாவது ஒருவர் எந்த நட்சத்திரத்தில் இறந்து போகிறார் என்பதில் இருந்து இந்த கணக்கு வரும். இது போன்ற விரிவான விளக்கங்கள் மற்ற சமயங்களில் இல்லை என்பதால் தான், அவர்கள் சொல்லும் அந்த தீர்ப்பு நாள், வேறு மாதிரி சொல்லப்படும்.

நமது சமய சிந்தனைகளே நிறையா உள்ளது அதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள். அப்புறம் அடுத்தவர்களை பற்றி யோசிக்கலாம் என்று சொல்லி அவரை அனுப்பி வைத்தேன்.

இவ்வளவு தூரம் மஹாலய பக்ஷம் பற்றி சொன்னீங்க ஐயா, எல்லோருக்கும் பயன் தரும்படி, இதை வைத்து ஒரு சோதிட குறிப்பு சொல்லி நல்லதா நாலு வார்த்தை சொல்லுங்களேன் என்று கிளம்பும் முன் அவர் கேட்டதால் பால சோதிடர் வாசகர்களுக்கும் பயன்படுமே என அதையும் பகிர்ந்து கொள்கிறேன்.

கஜச்சாய யோகம் தான் அது. என்ன அது கஜச்சாய யோகம் என்று தலையை சொரிய வேண்டாம். இந்த யோகம் எல்லா வருடமும் வருவதில்லை. இந்த யோகத்தில் வரும் நாளில் செய்யும் தர்ம காரியங்கள் அபரிமிதமான பலன்களை செய்ய வல்லது இது போன்ற யோக நாள் என தெரியாமல் அன்று செய்த பித்ரு காரியங்களினால், மிகப்பெரிய பலன்களை பெற்றவர்களையும் நாம் பார்த்து இருக்கலாம்.

சரி அது என்ன கஜச்சாய யோகம் என்று பார்ப்போம். சூரியன் ஹஸ்த நட்சத்திரத்திலும், சந்திரன் மகா நட்சத்திரத்திலும் இருக்க அன்று திரியோதசி திதியும் சேரும் போது இந்த யோகம் ஏற்படுகிறது. ஒளிக் கிரகமான சூரியனும் சந்திரனும் சேர்ந்து ஹஸ்த நட்சத்திரத்தில் தோன்றினாலும் இந்த யோக அமைப்பு உண்டு. இந்த யோகம் இந்த ஆண்டு 23 ந்தேதி வருகிறது. இதை வாசக அன்பர்கள் take home ஆக வைத்துக் கொண்டு நற்பலனை பெற்று வளமாக வாழ பிராத்தனை செய்கிறோம்.

இந்த யோகம் பகலில் அமைந்தால் மட்டுமே வலிமை உடையது என்பதை நீங்கள் சொல்லாமலே தெரிந்து கொள்வீர்கள் என நம்புகிறோம்.

உங்களுக்காக முக்கியமான நாட்களை பட்டியலிட்டு தருகிறோம். நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 32 -

கால சர்ப்ப தோஷமா? அல்லது யோகமா? என பட்டி மண்டபம் நடத்தினால், எந்த கட்சி ஜெயிக்கும் என கற்பனையாக யோசித்தால், சிந்திக்க செய்திகள் நிறையவே வரும்.

சர்ப்ப தோஷம் என்றாலே பயமும் வரும், எந்த மதத்தினராக இருந்தாலும், பரிகாரமும் செய்தே ஆக வேண்டும் என்பதை சொல்லாமலே நீங்கள் அறிவீர்கள்.

சாதாரணமாக ஒரு முக்கிய நிகழ்வு பற்றி பேசும் போது, சர்ப்பம் கண் முன்னே தோன்றி விட்டால் அந்த செயலை நிறுத்தி விடுவது தான் கிராம புறங்களில் இன்னமும் வழக்கம். சர்ப்பம் என்றால் அத்தனை சிக்கலா என்று கேட்பதை விட்டுவிட்டு, சொல்ல கூடிய தகவல்களை/குறிப்புகளை எடுத்துக் கொள்ளுங்கள்.

பொதுவாக ராகுவுக்கும் கேதுவுக்கும் நடுவே மற்ற கிரகங்கள் இருந்தால் அது கால சர்ப்ப தோஷம் என்று சொல்லுவார்கள். இது மட்டுமே கால சர்ப்ப தோஷம் இல்லை என்றாலும் இது போல மற்ற குறிப்பிட்ட இடங்களில் சர்ப்ப கிரகங்கள் இருந்தாலும் சர்ப்ப தோஷம் என சொல்லுவார்கள். இதில் சர்ப்ப சாபம் வேறு என சொல்ல தொடங்கினால் கொஞ்சம் பயமாக தான் இருக்கும்.

உதாரணமாக சொல்ல வேண்டுமானால், குடும்ப ஸ்தானத்தில் கேது இருந்தால், அவர்களால் குடும்பம் நடத்த முடியாது. வாய்ப்பு கிடைப்பவர்கள் ஜாதகத்தை வைத்து ஆய்வு செய்து பார்த்துக் கொள்ளலாம். இது போல சர்ப்ப கிரகங்கள் இருக்குமிடம், இணைவு பெற்ற கிரகம் என வைத்து சொல்லி விட முடியும்.

சரிங்க ஐயா சர்ப்ப தோஷம் என்றால் பரிகாரம் செய்து தான் ஆக வேண்டுமா? இல்லை என்றால் என்ன ஆகும் என சிலர் கேட்க நினைக்கலாம். அதை சொல்வதற்கு தான் இந்த வார பதிவு.

கால சர்ப்ப தோஷம் என்றாலும் யோகம் என்றாலும் சர்ப்ப ஷாந்தி செய்தே ஆக வேண்டும். அதில் எந்த வகை தோஷம் என தெரிந்து கொண்டு அதை முறையாக செய்வது தான் சிறப்பு. சர்ப்ப கிரகங்கள் பன்னிரண்டு கட்டத்தில் எந்த இடத்தில் அமைந்து உள்ளதோ அதை ஒட்டி அதன் தோஷ விவரம் சொல்லும் முறையும் உண்டு..

அதற்கு ஏற்றார் போல திருத்தலங்களை தேர்வு செய்து அனுபவம் பெற்ற சோதிடர்கள் ஆலோசனை தருவார்கள். பொதுவாக அனைவரும் அறிந்த திருத்தலம் காளஹத்தி என்றாலும் சர்ப்ப கிரக நிலை மற்றும் அவை அமைந்த இடத்திற்கு ஏற்ப வழிபாட்டு தலங்கள் அமையும் என்பதையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். எல்லா இடத்திலும் ஒரே மாதிரி தானே இறைவழிபாடு இதற்கு ஏன் இப்படி திருத்தலங்களை தேர்வு செய்கிறார்கள் என்பது குறித்து இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

இது போல தோஷ பரிகார நிவர்த்தி செய்யவில்லை என்றால் வாழ்க்கையில் வளமை இருக்கிறதோ இல்லையோ ஒரு வெறுமை இருக்கும் என்பதை அவரவர் அனுபவத்தில் புரிந்து கொள்ள முடியும். சரி பரிகாரம் செய்து விட்டால் சரியாகி விடுமா என்று கேட்க வரும் அடுத்த கேள்விக்கு பதில் அதை பிரசன்னம் போட்டு பார்த்து தெரிந்து கொள்ளலாம். அதனால் தான் அனுபவம் பெற்ற சோதிடர்கள் குறித்து சொல்லும் நாளில் பரிகார ஷாந்தி பூஜை செய்ய வேண்டும் என்பதை தெரிந்து கொள்வது அவசியம்.

உங்களுக்கு குறிப்பாக ஒரு செய்தி சொல்ல போகிறேன். குறித்து கொள்ளுங்கள். எந்த ஒரு செயலை செய்யும் போதும் அது தண்ணீரில் போட்டு எடுத்தால் சுத்தமாகும் அல்லது மாற்றம் அடையும் என்பதை நாம் எதார்த்தமாகவே புரிந்து கொள்ள முடியும். உதாரணமாக, பருப்பை தண்ணீரில் ஊற வைத்தால் அது முளை விட்டு வந்து விடும். இது

போல காய்கறிகளை பழங்களை நீரில் கழுவி எடுத்தால் அது சுத்தமாகும்.

எதையாவது மறந்தால் தண்ணீர் குடித்தால் நினைவுக்கு வரும் என்பது நாம் அனுபவத்தில் புரிந்து இருக்கலாம். கோபமாக இருந்தால் கொஞ்சம் குளிர்ந்த நீர் அருந்தினால் கோபம் குறையும் என்பதை எத்தனை பேர் தெரிந்து வைத்து இருப்போம் சொல்லுங்கள். வீட்டுக்கு வந்தவருக்கு முதலில் குடிக்க தண்ணீர் குடிக்க கொடுப்பதும், அவர் மனநிலையில் மாற்றம் ஏற்பட்டு அமைதி நிலவட்டும் என்பதால் தானே.

சங்கீத சாதகம் செய்பவர்கள் கூட நீரில் இருந்து கொண்டு சாதகம் செய்வதால் குரல் வலிமை ஏற்படும் என்று சொல்லுவார்கள். வறட்சியினால் பூமி வறண்டு போனால், நந்தியை தண்ணீரில் இருக்கும்படி செய்து மழை வேண்டி திருமுறை பதிகம் பாடுவார்கள்.

வேதம் புதிது என்ற படத்தில், ஆத்திகனாக இருந்த அந்த படத்தின் ஹீரோ, மனம் மாறி இருக்கும் போது, தான் பயன்படுத்திய ஆயுதங்களை தாமிரபரணியில் போடுவது போல இயக்குனர் படம் எடுத்து இருப்பார் நினைவில் இருக்கிறதா?

அது போல நவக்கிரங்கள் தண்ணீரில் இருந்தால்.... சொல்ல வரும் விஷயம் புரிகிறது என்று நீங்கள் சொல்வது காதில் விழுகிறது.

ஸ்ரீராமர், இலங்கைக்கு செல்லும் முன் உப்பு விநாயகரை வணங்கி நவகிரகங்களை நீரில் பிரதிஷ்டை செய்ததாக சொல்லப்படும் திருத்தலம் தான் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள தேவி பட்டினம்.

சிறு துறைமுகமாக விளங்கிய இந்த இடத்தில், கரையில் இருந்து சுமார் 40 மீட்டர் தொலைவில், கடலுக்குள் அமைந்த இந்த திருக்கோயில் தான் நவபாஷான கோவில்.

இங்கே நவ கிரகங்கள் தண்ணீரிலேயே இருப்பதால், கெடுதலான கிரக பலன்கள் மாறி விடும் என இன்றும் நம்ப படுகிறது. இங்கே சென்று வரும், ஒவ்வொருவரும் இதை அனுபவத்தில் உணரலாம்.

சர்ப்ப தோஷம் மட்டுமல்ல எந்த தோஷம் உள்ளவர்களும் சரி, அது போல எதுவும் இல்லாதவர்களாக இருந்தாலும் சரி, வாழ்நாளில் ஒரு முறையேனும் இராமநாதபுரத்தில் இருந்து சுமார் 15 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள தேவி பட்டினம் என்ற இந்த திருத்தலத்திற்கு சென்று வழிபாடு செய்து ஷாந்தி பரிகாரம் செய்து கொள்வது அவசியம் என்பதை தெரிந்து கொள்ளுங்கள்.

எல்லாம் வியாபாரமாகி போச்சு சார். காசுக்காக அவரவர்கள் என்று சொல்லும் அந்த வழக்கமான பேச்சை கொஞ்சம் ஓரமாக வைத்து விட்டு, நீரில் போட்டு எடுத்தால் அதன் தன்மை மாறும் என்ற அடிப்படை அறிவியலை புரிந்து கொண்டு, ஒரு முறை சென்று வாருங்கள். மாற்றம் நிச்சயம் ஏற்படும் என்பதை உங்கள் உணர்வுகளால் புரிந்து கொள்ள முடியும்.

எப்போது போக வேண்டும். என்ன செய்ய வேண்டும் என்பதை உங்களுக்கு நம்பிக்கையான சோதிடரை ஆலோசித்து செல்லுங்கள். உங்கள் ஜாதகப்படி சர்ப்ப கிரக நிலை கொண்டு அவர் உங்களுக்கு விளக்கி சொல்லுவார். சிலருக்கு பரிகாரம் செய்யவே முடியாத நிலை இருக்கும் அதையும் உங்கள் சோதிடர் அடையாளம் காட்டி தருவார். மனம் தளராமல், நம்பிக்கையுடன் இருங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 33 -

ஒரு நிகழ்ச்சிக்கு போயிருந்தேன். “வெளிச்சத்திற்கு வாங்க-விசு அய்யர்” என மேடையிலே அறிமுக படுத்தினார்கள்.

அய்யர் வெளிச்சத்தில் தானே இருக்கிறார்.. அவரை வெளிச்சத்திற்கு வாங்க என எங்கே அழைக்கிறீர்கள் என்று நகைச்சுவையாக சொல்லி வந்தேன்.

அடுத்த வாரம் அய்யர் என்ன சொல்ல போகிறார் என்ற ஆர்வத்தை ஏற்படுத்தி தரும், பால சோதிடத்தின் இந்த சேவை பலருக்கும் சென்று சேர்ந்து இருக்கிறது என்ற மகிழ்ச்சியான செய்தியை சொல்ல இது ஒரு உதாரணம் அவ்வளவு தான்.

பெயருக்கு பின்னால் எதற்கு அய்யா ஜாதி என கூட்டத்தில் வந்த அன்பர் ஒருவர் கேட்டார். ஜாதி முக்கியமில்லை என்பதால் தான் அதை பெயருக்கு பின்னால் போட்டு இருக்கிறோம். அதை நாங்கள் உயர்த்தி பிடிப்பதாக இருந்தால் பெயருக்கு முன்னால் அல்லவா போட்டு இருப்போம் என்று சொல்லி அவரை சமாதான படுத்தினேன்.

ஜாதி ஒழிய வேண்டும் என பேசுபவர்களும் சரி, மற்றவர்களும் சரி. “அய்யர்” என்பது ஜாதி என பலரும் நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள். வெளிப்படையாக சொல்ல வேண்டும் என்றால், ஒழுக்கத்தில் சிறந்தவர்களை “அய்யர்” என்று சொல்லுவார்கள். “உயர்ந்தோர்”, அல்லது “பெருமையில் சிறந்தோர்” என்று தான் உலக புகழ் பெற்ற வின்ஸ்லோ அகராதியும் சொல்கிறது.

முந்தைய நாளில் பிராமண குலத்தில் பிறந்தவர்கள் ஒழுக்கத்தில் சிறந்து இருந்ததால் பிராமண வர்கத்தில் வந்தவர்களை “அய்யர்” என சொல்லும் வழக்கம் வந்தது. அது இப்போதும் தொடர்கிறது. எனவே

ஐயர் என்பது ஜாதி அல்ல “பெருமையில் சிறந்தோர்” என புரிந்து கொள்ளுங்கள்.

என இப்படி அந்த நிகழ்ச்சியில் பேசியதும், இதற்கு ஆதாரம் என்ன? நீங்கள் எதையாவது சொல்லி வைத்து விட்டு போகிறீர்கள் என்ற சந்தேகம் எங்களுக்கு வராதா? என கூட்டத்தில் இருந்தவர்கள் கேட்க ஆதாரம் இல்லாமல் அய்யர் பேசுவாரா என சில எடுத்துக்காட்டுக்களை வைத்தேன்.

திருத் தொண்டர் தொகை என்னும், பெரியபுராணம் என்ற நூல். சைவ திருமுறைகள் பன்னிரெண்டில், பன்னிரெண்டாம் திருமுறையாக வைத்து போற்றப்படுகிறது. இதன் ஆசிரியர் சேக்கிழார்.

இந்த நூல் சைவ அடியார்கள் அறுபத்து மூவரை பற்றியது என தமிழ் அறிந்த நல் உலகம் அறியும். இதில், ஆசிரியர், பிராமண வர்கத்தில் அல்லாத ஐந்து பேரை “அய்யர்” என்றே சொல்லி அழைத்து இருப்பார்.

என்ன சாரே..! சோதிடத்திலும் வருனாசிரமமா? என்ற சத்யராஜ் பாணியில் சிலர் கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அது தான் இந்த வார சிந்தனையாக உங்களுடன் பகிர்ந்து கொள்ள வந்தது.

சோதிடத்தில் நவகிரகங்களில் வருணாசிரம பாகுபாடு உண்டு. வருணாசிரமம் என்பது ஜாதியை குறித்தோ அல்லது ஒரு குலத்தை குறித்தோ வந்தது அல்ல.. பிற்காலத்தில் வந்தவர்கள் அதை அப்படி மாற்றி விட்டார்கள் என்பது வேறு சிந்தனை. அதை வேறு ஒரு சமயத்தில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

ஒரு வேலையை பகுத்து செய்வது என்பதை இன்றைய நடைமுறைக்கு ஏற்ப புரிந்து கொள்ளுங்கள். இதை division of labour என்று ஆடம் ஸ்மித் கோட்பாடுகளை, பொருளாதரத்தில் நமக்கு சொல்லி தந்து இருப்பார்கள். இந்த வேலை பகுப்பு முறையை தான் அன்றைய

நாளில் வர்ணங்களாக பிரித்து தந்து இருக்கிறார்கள். வர்ணங்கள் என்பது பிரித்து காட்டும் நிறம் என புரிந்து கொள்ளுங்கள்.

இன்றைய நாளில் அரசு அலுவலகங்கள் உட்பட கிளாஸ் 1- ஆபிசர் என தொடங்கி கிளாஸ் 4 வரை பிரித்து வைத்து இருப்பார்கள். ஒரு வேலையை இப்படி பகுக்காமல் செய்ய முடியுமா சொல்லுங்கள் பார்க்கலாம்..

இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து
அதனை அவன் கண் விடல்

என வருணாசிரமத்தை தான் வள்ளுவரும் சொல்கிறார் என்றால் நமக்கு வியப்பாக தானே இருக்கிறது.

இந்த வகையில் பிரித்து சொல்லப்பட்டதே வருணாசிரமம் என்பது என்ற அடிப்படையை தெரிந்து கொண்டு அடுத்த கட்டத்திற்கு போகலாம்.

சோதிடத்தில், பிராமணர் என்ற பிரிவில் வரும் கிரகங்கள் தேவ குரு வான வியாழனும், அசுர குருவான சுக்கிரனும்

க்ஷத்திரியர் என்ற பிரிவில், சூரியனும், செவ்வாயும். வைசியர் என்ற பிரிவில் சந்திரனும், புதனும்., நான்காம் வருணத்தவர் என்ற பிரிவில், சனியும், பிற மதத்தவர் என்ற பிரிவில் ராகுவும் கேதுவும் அமைத்து கொடுத்து உள்ளார்கள்.

ஒரு ஜாதகத்தை அலசும் போது, இந்த குறிப்புகளை வைத்து பலன் சொல்ல எடுத்துக் கொள்வதும், அவரவரின் இயல்பு நிலையை எடுத்து சொல்வதும் சோதிடர்களுக்கும் சோதிட

ஆர்வலர்களுக்கும், தனியாக எடுத்து சொல்ல வேண்டிய அவசியம் இல்லை.

ஒழுக்கத்தில் சிறந்தவர்கள் பிராமண குலத்தை சேர்ந்தவர் என்பதால், குரு பார்க்க பாவம் போகும் என்பார்கள்.

அரசு துறைக்கு என சோதிடம் அடையாளம் காட்டும் கிரகம் சூரியனும், செவ்வாயும் க்ஷத்திரிய பிரிவில் வருவார்கள்.

அதெல்லாம் சரிங்க ஐயா, நாட்டை/அரசை ஆட்சி செய்வது யார் என்ற அடுத்த கேள்வி உங்கள் மனதில் வந்து இருக்கும். அதற்கு தமிழே பதிலும் சொல்லும். ஒவ்வையாரின் இந்த பாடலை பாருங்கள். இதன் பொருளை விக்கிபீடியாவில் தேடி சரி பார்த்துக் கொள்ளுங்கள்.

***"நூல் எனிலோ கோல் சாயும், நுந்தமரேல் வெஞ்சமராம்***
***கோல் எனிலோ அங்கே குடி சாயும்-***
***நாலாவான் மந்திரியும் ஆவான் வழிக்குத் துணை ஆவான்***
***அந்த அரசே அரசு!"***

ஒரு அமைச்சரவையில், முப்புரி நூல் அணிந்தவர் (அந்தணர்) என்றால் நீதி தவறும்.

உன் உறவினர் (க்ஷத்திரியர்) என்றால் கொடிய போரினை மூட்டி விடுவார்கள். சண்டை வரும்.

வைசியன் என்றால் மக்களுக்கு துன்பம் வரும்.

எனவே நான்காம் வர்ணத்திலே வருபவனே நல்ல மந்திரி என்றும், அரச நெறிக்கு உற்ற துணையாக விளங்குவான். அவனைத் துணையாகக் கொண்டதே, நல்ல அரசாகவும் இருக்கும். என்று ஔவையார் பாடி வைத்து இருக்கிறார்.

இது சோதிட சிந்தனைக்கு எப்படி ஏற்புடையதாக உள்ளது என பாருங்கள். கர்மகாரகன் என்று சொல்லும் சனி தான் நம்மை நேர்படுத்தி நமது வாழ்க்கையை ஆட்சி செய்யும் கிரகம் என்பதை சோதிட அன்பர்கள் புரிந்து கொள்வார்கள்.

இதே சிந்தனையில், பத்ரகிரியாரும்,

***சாத்திரத்தைச் சுட்டு சதுர் மறையைப் பொய்யாக்கிச்***
***சூத்திரத்தைக் கண்டு துயர் அழிப்பது எக்காலம்***?"

என பாடுகின்றார்.

பிற சமயத்தை குறித்து காட்டும் சர்ப்ப கிரகங்களுக்கு பார்வை இல்லை என்றும் மற்ற கிரகங்களுக்குக் பார்வையை அமைத்து வைத்திருப்பதும் சோதிட சிந்தனையை நமக்கு விளக்கி காட்டுகிறது அல்லவா..?

அதனால் எந்த வருனத்தவரையும் வெறுக்காமல், அவரவர்களுக்கு உள்ள நல்ல உயர்வான குணங்களை எடுத்து பாராட்டி அன்பு காட்டி பழகுங்கள். நவகிரகங்கள் நல்லனவே செய்யும். இறை அன்பர்களுக்கு அவை நல்லனவே செய்யும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 34 -

அலுவலகத்திலாவது, அல்லது உறவில் நடக்கும் ஏதாவது ஒரு நிக்ழ்ச்சியாலாவது என எப்போதாவது நாம் அவமானபடும் படியான அல்லது மன காயம் ஏற்படும் படியான சூழல் ஏற்பட்ட அனுபவம் நம்மில் பலருக்கு இருந்து இருக்கும். இதை தவிர்க்கவும் முடியாது. நமது பக்கம் தவறே இல்லாத போது இது போல நடந்து விட்டால் அதை ஏற்கவும் முடியாது. அந்த மன உளைச்சலில் சிலருக்கு தூக்கம் வராது, சிலர் இதையே சொல்லிக் கொண்டு தனியாக புலம்பிக் கொண்டு இருப்பார்கள்.

இது போன்ற சமயங்களில், நமது செயல்பாடுகள் மூன்று விதமாக இருக்கும். அவை, அவமான படுத்தியவரை பழி வாங்க வேண்டும் என்று வாய்ப்பை தேடிக் கொண்டிருக்கும் நிலை. இது போன்ற சந்தர்ப்பங்களினால், நமது நேரமும் விரையமாகும், உழைப்பு அல்லது சிந்தனை என அனைத்தும் வீணாகும். இதைவிட உட்பகை வளர்ந்து, அவருக்கும் நமக்கும் உள்ள நட்பு/உறவில் விரிசல் ஏற்பட்டு விடும். அவர் இருக்கும் இடத்தை, அல்லது அவர் ஒரு நிகழ்ச்சிக்கு வந்தால் நாம் போகாமல் தவிர்ப்பது போன்ற நிலை ஏற்படும். இது நல்லுறவு பேணுவதில் சிக்கல் இருக்கும்.

அல்லது, அவரை அந்த சம்பவம் நடந்த போதே, அவரை எதிர்த்து திட்டி, பேசி, நமது நிலைப்பாடுகளை உறுதி படுத்துவது போல, அல்லது இந்த அவமானத்திற்கு பொறுப்பாளி நான் இல்லை என நமது ஏக்கத்தையும் வருத்தத்தையும் வெளியே கொட்டி, தேவையிலாமல் ஒரு விரோத உணர்வுகளை ஏற்படுத்தி தருவது போல இருக்கும். இது கடினமான வார்த்தைகள் அல்லது உணர்வுகளில் அமைந்து விட்டால் சிக்கல் பெரியதாகவே இருக்கும்.

அல்லது, அது போன்ற சமயங்களில், அமைதியாக இருந்து அல்லது அமைதியாக விலகி, இன்னொரு வாய்ப்பில் அல்லது தனியாக ஒரு சந்தர்ப்பத்தில் அவருக்கு சொல்லி அவருக்கு புரிய வைக்கும்படியாக இருக்கும்.

இதில் எதை செய்வது என்று உங்களுக்கு சொல்வதை விட, நமக்கு சோதிட அமைப்பு அன்றைய நாளில் எப்படி இருக்கிறதோ அப்படி தான் அது நடக்கும். "புத்தி கர்மானுசாரணி" என்பது போல, நமது புத்தி கர்மத்தை ஒட்டி தான் அமையும்.

அன்றைய நாள் சந்திராஷ்மாக இருக்கலாம், அல்லது கோச்சாரத்தில் சஷ்டாஷ்டகத்தில் இருக்கலாம் என சில சோதிட சிந்தனைகளை சொல்லலாம் என்றாலும்,

பொதுவாக நம்மை விட பெரியவர்கள், அனுபவத்தில் சிறந்தவர்கள், எல்லோரும் சொல்வது, உங்களை யாரவது ஏளனம் பேசினால் பொறுமையாக அமைதியாக இருங்கள். வாயை கொடுத்து எரிகிற நெருப்பில் நெய் ஊற்றும் வேலையை செய்யாதீர்கள் வாயை அடக்குங்கள் என்று தான் அறிவுரை சொல்வார்கள்.

அட ஆமாங்க.. ஆனால் இயல்பில், அது முடியலையே என்று சொல்ல வரும் உங்கள் குரல் காதில் விழுகிறது. ஆனால் இப்போ சொல்ல வரும் விஷயம் என்ன என்றால், ஏன் அவர்கள் அப்படி சொல்லி இருக்கிறார்கள் என்று தெரியுமா என்று சிந்தனை தான்.

இங்கே தான் சோதிட சிந்தனை பொதிந்து கிடக்கிறது என்று சொன்னால் ஆச்சரியமாக தான் இருக்கும்.

உங்களை அவமான படுத்துபவர்கள் அல்லது மன காயத்தை ஏற்படுத்துபவர்கள், ஆறாமிடம் என்பது உங்களுக்கு தெரிந்து இருக்கும்.

அதாவது உங்கள் ஜாதகத்தில் குரு இருக்கும் இடத்தில் இருந்து ஆறாம் இடத்தில் அவர்கள் ஜாதகத்தில் குரு இருக்கும்.

அட போங்க சார், இதை எப்படி தெரிந்து கொள்வது, அவர்கள் ஜாதகத்தை வாங்கி, அதை சரி பார்த்து, அதுக்குள்ள கோபமும் வேகமும் போயிடும் என்று நீங்கள் கிண்டல் செய்வது புரிகிறது.

6 என்பது அவமானம் அல்லது மன காயம் என்றால், அதை வெளிப்படுத்தும் உணர்வு அல்லது செயல்முறை என்பது 3ம் இடம் இல்லையா..

ஆக, இந்த 6 க்கு 3மிடம் 8இல்லையா. (6 ல் இருந்து எண்ணிபாருங்கள்) இது தான் அவமானத்தை அல்லது மன காயத்தை ஏற்படுத்தும். 8ம்மிடம் அவமானம் குறிக்கும் இடம் இல்லையா.

அப்படியானால் அதற்கு நிவர்த்தி என்ன என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அந்த 8ம்மிடத்திற்கு 12மிடம் 7ம் இடம் தானே. எந்த ஒரு பாவகத்திற்கும் அதன் 12ம் பாவகம் தன் பலம் இழக்கும் இல்லையா..

அந்த வகையில் 8இல் இருந்து 7 இடங்களை எண்ணி பாருங்கள் இது தான் நிவர்த்தி தரும் இடம் இது லக்கினத்திற்கு 2ம் இடமாக அமைந்து விடுகிறது அல்லவா.

சரி இந்த 2ம் பாவக காரகம் என்ன என்று சோதிட ஆர்வலர்களுக்கு தெரியும், அது தான் வாக்கு ஸ்தானம் அல்லது பேச்சு தானே. அதனால் பேச்சை சிக்கனமாக அல்லது வாக்கை கவனமாக உணர்ச்சி வசபடாமல், பொறுமையாக கையாண்டால் அவமானத்தால் ஏற்படும் உணர்வு குறையும், அல்லது மறையும் என்பதை புரிந்து கொள்ள முடிகிறது இல்லையா.

இந்த சோதிட சிந்தனையை கருத்தில் வைத்து தான் நமக்கு அற நூல்கள், "ஆறுவது சினம்" என்றும் பிறர் பழித்து பேசும் போது,

பொறுமையாக எதிர்வாதம் செய்யாமல் வாய் சொற்களில் அடக்கம் இருக்க வேண்டும் என்றும் பழி அவமானம், மனகாயம் ஏற்படும் சமயங்களில், கையாளும் நிவாரணம் சொல்லி இருக்கிறார்கள் என்றால் ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா.

நமது வாழ்க்கை முறையானாலும் சரி, அறம் சொல்ல வந்த நூல்களானாளும் சரி, அதில் சொள்ளப்பட்டவைகள் சோதிட சிந்தனையை கருத்தை அடியொட்டியே இருக்கும். இதனால் தான் அற நூல்களை படைப்பவர்கள் அடிப்படையில் சோதிட ஞானம் பெற்றவர்களாகவே இருப்பார்கள்.

நமது அடிப்படை வாழ்க்கை முறையே சோதிட சிந்தனையில் அமைந்தது தான். சோதிடம் என்பது எதிர்கால பலன்களை சொல்வதற்கு மட்டும் பயன் படும் சாத்திரம் என்று கருதுவது சரியல்ல.

காசு கொடுத்தால் எதிர்காலத்தில் வரும் நிகழ்வுகளை சோதிடர் எடுத்து சொல்லுவார்கள் என்ற மன நிலையில் இருந்து மாறி, அறம் சொல்ல வந்த நூல்களின் சாத்திரம் தான் சோதிடம் என்பது போல புரிந்து கொண்டால், சோதிடர்களை அறவானர்களாக மதிக்கும் எண்ணம் வரும் அந்த எண்ணம் வளர்ந்தால், சோதிடர்களிடம் எவ்வளவு கட்டணம் வாங்குவீர்கள் என்று கேட்காமல், சோதிடர்களுக்கு புஷ்டியாக தக்ஷனை கொடுத்து கவுரவிப்பார்கள் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 35 -

நம்ம வீட்டுக்கு யாராவது வந்தால், அவர்களுக்கு முதலில் தண்ணீர் குடிக்க கொடுத்து விட்டு, ஒரு வாய் காப்பி சாப்பிடுங்க என்று சொல்லும் அற வாழ்க்கை நமக்கு முந்தைய தலைமுறை வரை இருந்தது.

இப்பவும் சில வீடுகளில் இருக்கிறது. வீடுகளில் இல்லத்தரசிகளின் ஒத்துழைப்பு இல்லாத சில வீடுகளிலும், சிலரிடம் வீட்டுக்கு வெளியே எங்கேயாவது பார்த்தால், வாங்க காப்பி சாப்பிட்டு விட்டு போகலாம் என்று அன்போடு உபசரிப்பார்கள். இது இயல்பாகவே (habitual)அவருக்குள் இருந்து வரும். அவர்கள் வளர்ந்த சூழல் அப்படி இருக்கும்.

என்னவோ போங்க சார். ஒரு வாய் காப்பி சாப்பிடுன்னு அவன் சொன்னானா?! என்று கேட்டு வருத்தத்தை கொட்டுபவர்களும் இருக்க தான் செய்கிறார்கள்..

என்ன விலை ஏறினாலும் எந்த விலைக்கு விற்றாலும் எந்த ஊருக்கு போனாலும் காலையில் தூங்கி எழுந்து பல் துலக்கிய பிறகோ அல்லது அப்படியோ முதலில் டீசல் (அதாங்க காப்பி) போட்டால் தான் சிலருக்கு வண்டியே ஓடும். இது இன்னமும் பல குடும்பங்களில் அன்றாடம் நடக்கும் நிகழ்வு தான்.

பெட்ரோலியத்திற்கு அடுத்த படியாக உலகிலேயே அதிக அளவில் விற்று வாங்கும் பொருளாக இருபது இந்த காப்பி தான்.

சரி. இந்த காப்பியில் என்ன தான் இருக்கு என்று கேட்கறீங்க புரிகிறது. காப்பி சாப்பிடுவது நல்லதா கெட்டதா என சொல்ல வரவில்லை. அதை அறிவியல் அறிஞர்கள் பார்த்துக் கொள்வார்கள். இருந்தாலும் சோர்வாக இருக்கும் போது ஒரு “சிப்” காப்பி

குடிக்கலாமா? என்று கேட்டு பாருங்கள். உங்களுக்குள்ளேயே தனி உற்சாகம் பிறக்கும்.

முன்பெல்லாம் காபி என்றாலே, டிகாஷன் போட்டு (இப்போ மாதிரி இன்ஸ்டன்ட் காபி அப்போ இல்லை) அதை டபரா டம்பளரில் வைத்து தான் கொடுப்பார்கள் அதான் மரியாதை.அதுவும் பித்தளை டபரா டம்பளர் என்றால் அதுக்கான மவுசே தனி. அதன் சுவையும் அலாதி. (டபரா என்றால் என்ன என்று யாரும் கேட்க மாட்டீர்கள் என்பதால் அது பற்றி சொல்லவில்லை)

காலம் மாறி போச்சு டபராவும் போச்சு பித்தளையும் போச்சு, எவர்சில்வர் டம்பளர், என உருமாறி, பீங்கான் கோப்பை என தடம் பதித்து இப்போ பேப்பர் கப் வரை வந்து விட்டாலும் காப்பியின் சுவை மட்டும் மாறவில்லை..அது தரும் புத்துணர்ச்சிக்கும் குறைவில்லை.

காப்பியை போலவே டீ குடிப்பவர்களும் இருக்கிறார்கள், என்றாலும், இப்போ சொல்ல வரும் விஷயம் என்னானா, காப்பியை விரும்பி குடிப்பவர்கள் யார் என்று தான்... என்னது சோதிடத்தில் காபியா அது எப்படிங்க...? என்று கேட்க போறீங்க அதுக்கு தான் இந்த வார சிந்தனை.

காபிக்கு காரகம் வகிக்கும் கிரகம் எது தெரியுமோ... பேஷ்.. பேஷ்... காப்பி ரொம்ப நன்னாயிருக்கு என்று சொல்லிக் கொண்டே, “செவ்வாய்” தான் என்று சொல்லிவிடலாம்.

செவ்வாய் ஆதிக்கம் பெற்றவர்கள் பெரும்பாலும் காப்பி பிரியர்களாகவே இருப்பார்கள். குறிப்பாக மேஷ ராசி அல்லது மேஷ லக்கினம் உள்ளவர்கள் காப்பி வரிசையில் முதலில் நிற்கும் நபராக இருப்பார்கள். அதுவும் மேஷத்தில் செவ்வாய் இருந்து விட்டால் காப்பிக்காக உயிரையும் கொடுப்பார்கள் என்று சொல்லும் அளவிற்கு காப்பி பிரியர் என்றால் ஆச்சரியமாக தானே இருக்கும்.

அப்படின்னா, விருச்சிகமும் செவ்வாய் வீடு தானே, அந்த ராசியையோ லக்கினத்தையோ கொண்டவர்களும் இப்படி தானோ?! என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. ஆனால் இங்கே அது சந்திரனின் நீச வீடு அதனால் பால் சேர்க்காத கடுங்காப்பி அல்லது வர காப்பி இன்றைய பாஷையில் சொல்ல வேண்டும் என்றால் பிளாக் காப்பி பிரியார்களாக இருப்பார்கள்.

செவ்வாய்க்கு இந்த பக்கம் தானே குரு வீடு.. அங்கேயும் காப்பி மணக்குமா என சிந்திக்கிறீர்கள் புரிகிறது... குரு செவ்வாய் பரிவர்த்தனை பெற்றவர்கள் அல்லது குரு சாரத்தில் செவ்வாய் நிற்க பெற்றவர்கள் கள்ளி சொட்டாக(டிகிரி காபி போல) பில்டர் காபி பிரியர்களாக இருப்பார்கள். காப்பின்னா இப்படி தான் இருக்கணும் என்று காப்பிக்கு இலக்கணம் சொல்லும் காபி பிரியர்கள்..

இரண்டாம் பாவகம் தானே போஜனத்திற்கு. காபியும் உணவு பொருள் தானே. அப்படின்னா மீன ராசிக்கு இரண்டாம் இடம் செவ்வாய் வீடு அதே மாதிரி துலா ராசிக்கு இரண்டாம் வீடு விருச்சிகமும் செவ்வாய் வீடு. ஆக செவ்வாய் இங்கே இருக்க இவர்கள் காப்பிக்கு அடிமை என்பது போல புரிந்து கொள்ளலாம். இது போன்ற நபர்கள் அலுவலகத்தில் இருந்தால் அவர்களுக்கு ஒரு கப் காப்பி வாங்கி கொடுத்தே காரியத்தை சாதித்து கொள்ளலாம்.

காபி என்றாலே அதை டம்பளரில் ஊற்றி கொண்டு வரும் போதே நுரை ததும்ப, அந்த வாசனை காற்றில் கலந்து மூக்கை துளைத்துக் கொண்டு செல்லும் இல்லையா. அந்த காற்று ராசியில் அதாவது, மிதுனம், துலாம் கும்பம் ராசியில் செவ்வாய் இருந்தால், இவர்களுக்கு நுரை ததும்ப காப்பி தான் வேண்டும்.

எல்லாம் சரி தான், சனியை விட்டுடீங்களே ஐயா! என்று கேட்க வருவது காதில் கேட்கிறது. செவ்வாய் உச்சம் பெறும் இடம் மகரம் இது சனியின் வீடு, இங்கே செவ்வாய் அமர்ந்து விட்டால், காப்பியா, சுவையா, நுரையா, மனமா என எது பற்றியும் கவலை இல்லாமல்

காப்பின்னு ஒன்னு சூடா கொடுத்தா போதும் அதை குடித்துக் கொண்டே இருப்பார்கள்.

இப்போ எல்லாம் எங்கே சார் சூடா காப்பி, மால் பக்கம் போய் பாருங்க அங்கே எல்லாம் சில நூறு ருபாய் கொடுத்து கோல்ட் காப்பி தான் குடிக்கிறாங்க என்று அங்கலாய்த்து கொள்பவர்களே கொஞ்சம் கேளுங்கள், இவர்கள் எல்லாம் ராகு+செவ்வாய் சேர்க்கை பெற்றவர்களாக இருப்பார்கள், ஐஸ் காப்பி, கோல்ட் காபி போல குடிப்பார்கள்.

இப்படி நிறையா சொல்லிக்கிட்டே போகலாம். காப்பியில் சுவை இருக்கிறதோ இலையோ இது போன்ற சிந்தனைகள் சுவையாகவே இருக்கும். இது போன்ற சிந்தனைகள் காப்பிக்கு மட்டும் அல்ல எல்லாவற்றிகும் சொல்லலாம். வாய்ப்பு கிடைக்கும் போது, சமயத்திற்கு ஏற்ப அதை சிந்தனைக்கு எடுத்துக் கொள்வோம்.

இப்போ வானம் இருட்டிகிட்டு இருக்கிறது, குளிர்ந்த காற்றும் அடிக்கிறது. மழை காலமாக வேறு இருக்கிறது. இப்போ சூடா ஒரு கப் காப்பி குடிச்சா எப்படி இருக்கும்..? ம்..ம்..

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 36 -

நீங்கள் கவனித்தது உண்டா...?

தங்களுக்குள் pre conceived ஆக ஒரு சில செய்திகளை வைத்துக் கொண்டு, அது சரியா தவறா என்று ஆராயாமல், நம்மிடம் அதை திணிப்பார்கள். இன்னும் சிலர் நாம் என்ன தான் சொன்னாலும், அதை ஏற்றுக் கொள்ளாமல், தான் சொல்வதை மட்டுமே கேட்க வேண்டும் என்று எரிச்சலூட்டும் விதமாக பேசுவார்கள். டிவியில் சிலரது பேட்டிகளை நீங்கள் கூட பார்த்து இருக்கலாம்.

சிலர் பேசும் போது.. கோபத்தை கிளப்பாதீங்க... வாயில கெட்ட வார்த்தை வர போகுது.. என்று கோபத்தை வேறு விதமாக நமக்கு எச்சரிப்பார்..

ஒரு சிலர் பேசும் போது பார்த்து இருப்போம்.. வாய் வரை கெட்ட வார்த்தையை பேசி விட்டு.. நாக்கில் நிறுத்தி விடுவார்கள்.. (தூல வைகரிக்கு வராது.. சூக்கும வைகரி வரை வரும்)

இன்னும் சிலர் பொறுமை இல்லாமல் கையில் இருப்பதை தூக்கி அடிப்பார்கள். கொஞ்சம் முதிர்ச்சி இல்லாதவராக இருந்தால் வீட்டில் உள்ள இல்லத்தரசி என கூட பார்க்காமல் இரண்டு கொடுப்பார்கள். அலுவலகம் அல்லது பொது இடமாக இருந்தால் get out என்று மற்றவர்களை சொல்லி விட்டு தான் வெளியே போய் விடுவது போலவும் வேடிக்கையாக தன்னை அறியாமலே செய்வார்கள்.

ஆனாலும் பாருங்க.. நானும் கோபத்தை அடக்கனும்னு தான் பார்க்கிறேன். அது முடியலை என்று கோபத்தை பல முறை வெளிப்படுத்திய பிறகு ஒவ்வொரு முறையும் இதையே சொல்லுவார்கள்.

கோபம் அத்தனை கொடுமையானதா?

கோபத்தில் யாரையாவது திட்ட போறீங்களா.. இவர்களால் கொஞ்சம் கூட பொறுமையாக இருக்க முடியாதா?. அவரகள் என்ன சொல்ல வருகிறார்கள் என்று கேட்டுக் கொள்ள மனமோ விருப்பமோ இல்லாமல் இருக்கலாமா? இப்படி கூடவா மனமுதிர்ச்சி இல்லாமல் இருப்பார்கள் என்று நீங்கள் வருத்தப்பட்டு கூட இருக்கலாம்.

அதெல்லாம் சரிங்க.. இதுக்கு ஏதாவது வழி இருக்குதா என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது.

பொதுவாக எல்லோரும், கோபத்தை அடக்கு, தண்ணீர் குடி, ஒன்று முதல் நூறு வரை எண்ணிக்கொண்டு இரு, திருக்குறளில் வெகுளாமை, அதிகாரத்தை படி, என்பது போல சிலவற்றை நம்மால் முடியவே முடியாத சிலவற்றை சொல்லி தருவார்கள்.

இதெல்லாம் ஒரு ஓரமாக வைத்து விட்டு..

இப்போ சொல்றதை செய்து பாருங்கள்... உங்களுக்கு கோபம் வராது.. அல்லது கோபப் படும் போது தடினமான வார்த்தை வராது.

உங்கள் இடது கை சுண்டு விரலை (விரலின் நகத்தை ஒட்டி உள்ள முதல் பகுதியில்) கொஞ்ச நேரம் வலது கை விரலினால் பிடித்துக் கொள்ளுங்கள்.. அல்லது சுண்டு விரலை பிடித்துக் கொண்டபடி பேசி பாருங்கள்..

காக்கா.. உஷ்... என்பது போல கோபம் போயிடும்...

சுண்டு விரலில் அப்படி என்ன இருக்கு... என கேட்க தோன்றுகிறதா... இந்த சுண்டு விரல் ரகசியம் பற்றி இன்னொரு சிந்தனையில் பகிர்ந்து கொள்ளலாம்.

பொதுவாக மக்கள் பேசும் போது... சிந்தித்து பேசுவது இல்லை..கேள்வி தாளில் கூட பாருங்கள்.. - "கூறுக..." என்று தான்

இருக்கும்.. அதன் பொருள் - என்ன புரிந்து கொண்டீர்களோ அதை சிந்தித்து எழுதுக என்பது தான்...

ஆனால்.. நம்ம பிள்ளைகள்.. எதாவது ஒரு தமிழ் உரையில் உள்ளதை படித்து அப்படியே அவர்கள் சொல்வதை பேப்பரில் "சொல்லி" விட்டு வருவார்கள்

ஆக சிந்தித்து பேசுவதற்கு தான் கூறல்.. இப்படி இருந்து விட்டால் பேச்சு குறைந்து விடும்.. பேச்சு குறைந்து விட்டால்.. ஆன்ம பலம் பெருகும்.. அதைவிட பேசும் பேச்சுக்கள் சத்தாக இருக்கும்..

இதெல்லாம் நடக்கிற காரியமா என்று கேட்பது புரிகிறது.. சரி சோதிட குறிப்புகளை வைத்து இதை அறிவது எப்படி என தெரிந்து கொள்ள வேண்டாமா?

குருவுக்கு இரண்டாமிடத்தில் செவ்வாய் இருக்க பெற்றவர்கள் இப்படி தான் பேச தொடங்கும் போதே 100 டிகிரியில் தான் தொடங்குவார்கள். அடுத்தவர்கள் சொல்வதை கேட்காமல் தான் சொல்ல வரும் கருத்தை திணிப்பார்கள். இவர்களை தொந்திரவு செய்யாமல் ஓரமாக வைத்து விடுங்கள்.

செவ்வாய்-ராகு இனைந்து ஜாதகத்தில் இரண்டாம் பாவகத்தில் இருந்தால் (லக்கினத்திற்கு இரண்டில்) அவர்கள் வாயில் நல்ல சொல் வருமோ... என்றால் அது பில்லியன் டாலர் கேள்வியாக தான் இருக்கும். பேசும் ஒவ்வொரு வார்த்தைக்கும் “அந்த” adjective போட்டு தான் பேசுவார்கள்.

வாக்கின் வெளிப்பாடு தானே சொற்கள்.. பயனில்லாத சொற்கள் பக்குவப்படாத காய் போல, பயன் உள்ள சொற்கள் பக்குவப்பட்ட கனி போல. என்று தான்

***“இனிய உளவாக இன்னாத கூறல்***
***கனி இருப்ப காய் கவர்ந்து அற்று”***

என்று வள்ளுவம் சொல்கிறது.

ஒழுக்கமான அற நெறியில் நிற்பவருக்கு அப்படி ஒரு பக்குவப்படாத சொற்களே வராது என்பது சொல்லாமலே விளங்கும்

வாக்கு ஸ்தானத்தில் பாபிகள் இருந்தாலோ, லக்கினத்திற்கு அசுபர்கள் இருந்தாலோ அவர்கள் வாக்கு சுத்தமாக இருக்காது.. உயர்ந்த ஒழுக்கமான குலத்தில் பிறந்தவர்கள் அல்லது “சத்” குடும்பத்தில் பிறந்தவர் என்றால் கூட இப்படி தான் இருக்கும்.

இவர்களுக்கு ஒரு சின்ன ஆலோசனை உண்டு.. (கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் என்றால்..கூட இதை செய்யலாம்) நாக்கில் "பிள்ளை வளர்ப்பான்" பட்டையை தினமும் (சிறு வயது முதல்) கீறல் வேண்டும்... சின்ன வயதில் செய்ய தவறினால் இப்போது கூட செய்து கொள்ளலாம்.அல்லது ஒரு பிள்ளை வளர்ப்பான் பட்டை துண்டை பையில் வைத்துக் கொள்ளலாம்.

இவர்களை ஒதுக்கி தள்ள வேண்டிய அவசியம் இல்லை. இவர்களை விட்டு நாம் விலகி இருப்பது நமக்கு மட்டுமல்ல அவர்களுக்கும் நல்லதே..

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 37 -

என்னப்பா.. நீ உப்பு போட்டு தான் சாப்பிடுகிறாயா?

என நாம் கேட்பதை பார்த்து இருப்போம். சிலர், அவர்கள் செய்யும் அக்கிரமங்களை எல்லாம் நாம் செய்வது போல திரித்து பேசுவார்கள். மற்றவர்களையும் அப்படியே நம்ப வைக்க முயற்சி செய்வார்கள். அது சரி இவர்கள் எல்லாம் உப்பு போட்டு தான் சாப்பிடுகிறார்களா என்பது போல நமக்கு கேட்க தோன்றும்.

அப்படினா, உப்பு போட்டு தான் சாப்பிடனுமா? என்று கேட்டு பாருங்கள். உணவில் ஒரு நாள் உப்பு போட மறந்து விட்டால் சிலர் வீடுகளில் தட்டுக்கள் பறக்கும் அன்றைய பொழுது வீடே அலங்கோலமாக இருக்கும்.

“தம்மா துண்டு சோறு - அதில தம்மா துண்டு உப்பு” அதுக்குன்னு இப்படியா? என்று கேட்காதீர்கள். உப்பு இல்லா பண்டம் குப்பையிலே என்று அன்று சொன்னவர்கள் இன்று உப்பு இல்லா பண்டம் ஆனாலும் அவை தொப்பையிலே என்பது போல சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள்.

“இது என்னங்க ஐயா உப்பு பெறாத விஷயம்” இதுக்குக் போய் என நீங்க அந்த டிவி பேட்டியை பார்த்து விட்டு சிரிக்கிறீங்க புரிகிறது. அந்த உப்பை பற்றி தான் இந்த வாரம் சொல்ல வந்து இருக்கேன்.

இந்த “உப்புன்னா என்னங்க?” என்று எப்போதாவது யோசித்து பார்த்தது உண்டா? நாம் சாப்பிடும் உப்பு சோடியம் குளோரைடு என்பது போல வேதியல் பார்முலா உங்களுக்கு சொல்ல போவது இல்லை.

விவரமாக கேட்டுக் கொள்ளுங்கள். உப்பு என்றால் “அன்பு” என்று தான் பொருள். என்னது உப்புக்கும் அன்புக்கும் என்னங்க தொடர்பு என்பது போல யோசிக்காதீர்கள்.

*ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்*
*கூடலில் தோன்றிய உப்பு.*

என்ற திருக்குறளை ஒரு முறை படித்து பொருள் தெரிந்து பாருங்கள். உங்களுக்கும் புரியும்.

இதை வைத்து தான் உப்பு (அன்பு)இல்லா பண்டம் குப்பையிலே என்று சொல்லி வந்தது.. இதன் பொருள் அன்பு இல்லாமல் உள்ள உணவு பண்டம் பரிமாறபடுமானால் அவை குப்பையில் போட வேண்டும் என்பது தான் கருத்து. நம்ம மக்கள் வழக்கம் போல அதை 'உப்புக்கு' என எடுத்துக் கொண்டு விட்டதாக தெரிகிறது..

பொதுவாக காலில் வீக்கம் வந்தால் 'உப்பி' இருக்கு என்பார்கள்.. அதாவது அன்பு பெருகி பொங்குவது போல வீங்கி இருக்கிறது என்பது பொருள்.

இன்னும் தெளிவாக சொல்ல வேண்டும் என்றால்.. சாதாரணமாக நாம் சாப்பிடும் உணவுக்கு உப்பு அவசியமே இல்லை. ஆனால் நாம் தெரிந்தோ தெரியாமலோ இப்படி சாப்பிட்டு பழக்கப்பட்டு விட்டோம் என்பது தான் உண்மை.

(நீங்கள்) free flow உப்பு பயன்படுத்துபவர் என்றால்.. அது உப்பே இல்லை... இது பற்றி இன்னொரு சிந்தனையில் வாய்ப்பு கிடைக்கும் போது சிந்திப்போம்.. இப்போ தொடங்கிய சிந்தனைக்கு வரலாம்.

"உப்பிட்டவரை உள்ளளவும் நினை" - என்ற பழமொழியை நாம் அறிந்து இருப்போம். இங்கே அன்பை வைத்து சிந்திக்க வேண்டும்.. அன்பு உள்ளவர்களை உயிர் உள்ளளவும் நினைக்க வேண்டும் என்பது தான் பொருள். உப்பு போட்டு சோறு போட்டவரை என்று நீங்கள் தவறாக நினைத்துக் கொள்ள போகிறீர்கள்.

உப்பு வைத்த பானை நீர் கசியும்.. இல்லையா அது போல தான் அன்பு இருந்தால் அது கண்ணீரால் வெளிப்படும்.. இதனை தான் வள்ளுவரும், "***புன்கணீர் பூசல் தரும்***" என்று சொல்கிறது.

நமது தமிழர் கலாச்சாரத்திலும் பாருங்க, புதிய வீடு கட்டி கிரக பிரவேசம் போகும் போது.. உப்பை தான் முதலில் எடுத்து வைப்பார்கள்... அன்பு கசிய வேண்டும் என்பதற்காக...

தமிழர் சாப்பாட்டில் இலையில், முதலில் உப்பை தான் வைப்பார்கள்.. அன்புடன் விருந்து படைக்கிறோம் என்பதை குறிப்பால் சொல்வதற்காக. ஆக.. உப்பு என்றால்.. சாப்பிடுகிற உப்பு அல்ல.. - அது "அன்பு" என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

அட.. இதுக்கு தான் சாப்பாட்டில் உப்பு சேர்க்கிறார்களா என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. இதை வைத்து சோதிட சிந்தனை சொல்லி விடலாமே என்று தான் சிந்தனைக்கு வந்தது உப்பு. இல்லை ... இல்லை ... அன்பு

அன்பு உள்ளவர்கள் நமக்கு வாழ்க்கை துணையாக வந்து விட்டால், அப்புறம் என்ன மற்றது தானே வரும் இல்லையா. இந்த குறிப்பு சரியாக உள்ளதா சொல்லுங்கள்.

ஒருவருடைய ஜாதகத்தில் சந்திரனும் புதனும் சேர்ந்தோ, பலமாகவோ, கோனாதிபதியாகவோ இருந்து விட்டால், அவ்வளவு தான் அன்பு மழை ஆனந்தமாக பொழியும். அன்பில் சிறந்தவர்கள் இவர்கள் தான் என்று அடையாளம் காட்டி விடலாம். திருக்குறளில் அன்புடைமை அதிகாரமே இவர் தான் என்று சொல்லும்படி இருப்பார்கள்.

இயல்பான நிலையில் சொல்ல வேண்டும் என்றால் மூக்கிற்கு கீழே இவர்களுக்கு வியர்வை இருக்கும் அல்லது ஈர கசிவு இருக்கும். இது ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் என்பதை

அவரவர்கள் ஜாதகத்தை கொண்டு அல்லது அனுபவத்தை கொண்டு தெரிந்து கொள்ளலாம்.

அது சரிங்க அய்யா, திசை புத்தி என்று மாறிக்கிட்டே வருமே.. அப்போ இந்த அன்பும் மாறிவிடாதா என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. உண்மை தான். அன்பு என்பது உணர்வு, அந்த நிலைப்பாட்டில் மாற்றம் வராமல் இருக்க இங்கே தான் கேது தொடர்பை பார்க்க வேண்டும் இதுவும் சேர்ந்து விட்டால், பிறவி குணத்தை மாற்ற முடியாது என்று சொல்வது போல அமைந்து விடும். .

“அன்பு அகத்தில் இல்லாத உயிர் வாழ்க்கை” என்று திருக்குறள் சொல்லி இருப்பது போல அமைந்து விடாமல் இருக்க வேண்டும், இந்த குறிப்புகளை திருமண பொருத்தத்தில் மட்டுமல்ல காதல் பொருத்தத்திலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

அன்பு உதட்டில் இருந்து வழிய கூடாது உள்ளத்தில் இருந்து பொங்க வேண்டும் என்பதை புரிந்து கொள்ளுங்கள். அதனால் தான் “உப்பு” என்றால் “அன்பு” என்று பொருள் என உலக புகழ் பெற்ற வின்ஸ்லோ அகராதியும் சொல்லும். உப்பு கசியும் என்பது போல அன்பும் கசிய வேண்டும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 38 -

என்ன சார்.. தீபாவளி ஆச்சா...?!

என்று தான் இன்றைய நாளில் கேட்கிறார்கள். இது சரியா தவறா என்று சொல்வதற்கு வரவில்லை. இதில், இவர்கள் வாழ்த்து சொல்லவில்லை அவர்கள் வாழ்த்து சொல்லவில்லை என்று கூப்பாடு வேற போடுகிறார்கள்..

தீபவளி - வாழ்த்து சொல்ல வேண்டிய பண்டிகை இல்லை, அது வழிபாடு செய்ய வேண்டிய பண்டிகை, ஒரு வழிபாடு செய்யும் பண்டிகைக்கு வாழ்த்து சொல்வது முறையும் இல்லை, அது சரியும் இல்லை என்று எத்தனை சொன்னாலும் ஏதோ ஒரு சிந்தனையை மனதில் நுழைத்துக்கொண்டு, closed mind set ல் இது தான் தீபாவளி இப்படி தான் கொண்டாட வேண்டும் என்று இவர்களாகவே ஒரு கட்டத்தில் இருந்து கொண்டு தனக்குள்ளேயே ஒரு சட்டத்தை போட்டு கொண்டு இருக்கிறார்கள். யாரோ அனுப்பிய வாட்ஸ் அப் செய்தியை இன்னொருவருக்கு அனுப்பி விட்டு தீபாவளி வாழ்த்து சொல்லியாச்சு என்று சந்தோஷப்பட்டுக் கொள்கிறார்கள்.

எப்படியோ அவர்களும் தீபாவளியை கொண்டாடினால் சரி தான் ஆனால் பண்டைய நாளில் “கங்கா ஸ்நானம் ஆச்சா...?” என்று தான் கேட்பார்கள். தீபாவளி ஆச்சா என்று கேட்கும் பழக்கம் இல்லை. தீபாவளிக்கும் கங்கா நதிக்கும் என்ன தொடர்பு என இன்னொரு சந்தர்ப்பத்தில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

அது சரி, நரகாசுரன் இறந்த நாள் தானே தீபாவளி என்று சொல்வது காதில் விழுகிறது. சில விஷயங்களை மூடத்தனமாக நம்புவதை விட சிந்தித்து ஏற்றுக் கொள்வது தானே சிறப்பு என்று சொன்னால் நம்மை ஒரு மாதிரி பார்க்கிறவர்களும் இருக்க தான்

செய்கிறார்கள். அதற்காக சிந்தனைக்கு செய்திகள் தராமல் இருக்கலாமா?

ஒருவர் இறந்த நாளை கொண்டாடுவது சரியா.. அல்லது முறையா.. இறந்தவர்கள் யாராக இருந்தாலும் அது போல கொண்டாடி மகிழ்ந்தால் பிரேத சாபம் வந்து விடாதா என்று சிந்தித்து பாருங்கள்.. நாங்களும் தான் பல வருஷம் தீபாவளி கொண்டாடுகிறோம். எங்கள் வாழ்வில் ஒளியே வரவில்லை என்று சொல்லும் மக்களும் இருக்க தான் செய்கிறார்கள்.

அசுரன் ஒழிந்து தீமை மறைந்து நன்மை மலர என்று எதையாவது சொல்லி காதில் பூ சுத்துகிறார்கள் என்று சொல்ல போவதில்லை.. அசுரர் என்று ஒருவர் இருந்தால் தான் தேவர் என்ற ஒருவரையே நாம் அடையாளம் காண முடியும் என்ற உளவியலை தெரிந்து கொள்ள வேண்டும் இல்லையா.. இரட்டை தன்மை கொண்டது தான் வாழ்க்கை என்பதை இந்த தொடரின் தொடக்கத்திலேயே நாம் பார்த்து இருக்கிறோம்.. இலவசமாக 'துரோகி' பட்டம் கிடைக்கும் இன்றைய நாளில் தீபாவளியை கொண்டாடுபவர்கள் தேவர்கள். கொண்டாதவர்கள் அசுரர்கள் என்று சொல்லிட போறாங்க...என்று சொல்லி நீங்கள் சிரிப்பதை புரிந்து கொள்ள முடிகிறது.

ஆக, தீபாவளி நரகாசூரன் இறந்த நாள் இல்லை என்பதை புரிந்து கொண்டு அது போன்ற புராண கதைகளை அந்த பக்கம் ஓரமாக வைத்து விட்டு சிந்திக்க வாருங்கள். உங்கள் பிள்ளைகளுக்கு இது போன்ற சிந்தனைகளை சொல்லி அவர்கள் அறிவை வளர்க்காமல் இருந்து விட கூடாது என்று தான் இங்கே பதிவு செய்கிறோம்.

நரகாசூரன் இருந்த காலத்தில் பட்டாசு இருந்துச்சா.. அல்லது இது போல வேற எதாவது இருந்துச்சா என்று கேட்டால் இன்றைய பெரிசுகள் விழிக்க தான் செய்வார்கள். இது போன்ற காதில் பூ சுத்தும் வேலையை உங்கள் ஜி யிடம் கொடுத்து விடுங்கள்.. ஒருவர் இறந்த

நாளை ஒவ்வொரு வருடமும் கொண்டாடும் மடமையை இத்துடன் விட்டு ஒழிக்க வேண்டாமா?

என்ன ஐயா நாத்திகம் பேசுகிறீர்களா ..? என்று யாராவது கேட்க போறாங்க.. மாற்று சிந்தனையை சொல்வதற்கு தான் இத்தனையும் சொல்கிறோம். கவனமாக கேட்டுக் கொள்ளுங்கள்.

புரட்டாசி மாதத்தில் வரும் அமாவாசை, மஹாளய அமாவாசை, அதான் தெரியுமே என்று சொல்லாதீங்க இப்படி கோர்வையாக சொன்னால் தான் சொல்ல வரும் விஷயம் புரிந்து கொள்ள முடியும்.

மஹாளய அமாவாசையை தொடர்ந்து ஐப்பசி அமாவாசை தான் தீபாவளி, அதை ஒட்டி வரும் ஐப்பசி பவுர்ணமி தான் அன்னாபிஷேகம், எல்லா சிவன் கோவில்களிலும் சிவ பெருமானுக்கு அன்னத்தினால் அபிஷேகம் செய்வார்கள். இது ஒரு universal பண்டிகை. “கார்த்திக் பவுர்ணமி” என்றும் “தேவ் தீபாவளி” என்றும் வடநாட்டில் விமர்சையாக கொண்டாடுவார்கள். லட்ச கணக்கில் மக்கள் கூடி கங்கை கரையில் ஸ்நானம் செய்வார்கள்.

இந்த புரட்டாசி அமாவாசை ஐப்பசி பவுர்ணமி வரையில் உள்ள 45 நாட்களை தான் ஒரு மண்டலம் என்று சொல்லி பூஜைக்கு அல்லது மருந்துக்கு அல்லது சிகிச்சைக்கு என்றும் சோதிடத்தில் கூட பரிகாரமாக சொல்லுவார்கள். சிலர் 48 நாட்கள் என்றும் 41 நாட்கள் என்றும் ஒரு மண்டலத்தை சொல்லுவார்கள். தமிழில் சில மாதங்களுக்கு கூடுதலாக அல்லது குறைவாக நாட்கள் வரும் என்பதை சொல்லாமலே நீங்கள் தெரிந்து இருப்பீர்கள் என்பதால் அது பற்றிய சிந்தனையை உங்களிடமே விட்டு விடுகிறோம்.

அதனால் தான் தீபாவளி அன்று பரணி தீபம் ஏற்றி வழிபடும் வழக்கம் நம்மிடம் உண்டு. இந்த தீபாவளிக்கு எத்தனை பேர் இந்த பரணி தீப வழிபாடு செய்தார்கள் என்பதை விட எத்தனை பேர் பட்டாசு வெடித்து புது படத்திற்கு போனார்கள் என்று சுலபமாக சொல்லி விடலாம்.

அடுத்தவர்களுக்கு தர வேண்டும் என்ற அடிப்படையில் தான் எல்லோருக்கும் தீபாவளி போனஸ் தர படுகிறது என்றால் ஆச்சரியமாக தானே இருக்கும்.

connecting the dots என்பது போல, புரட்டாசி அமாவாசையில் தொடங்கி ஐப்பசி பவுர்ணமி வரையில் என்று ஒரு இணைப்பு செய்து பாருங்கள் தீபாவளி என்பது என்ன என்று உங்களுக்கே புரியும். இதை சோதிட அன்பர்களுக்கு விவரித்து சொல்ல வேண்டிய அவசியம் இல்லை என உங்கள் சிந்தனைக்கே விட்டு விடுகிறேன்.

அதை தொடர்ந்து “விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்” என்று திருஞான சம்பந்தர் பதிகத்தில் வரும் கார்த்திகை பவுர்ணமி தான் தீப திருநாள். என்று வரிசையாக சொல்லிக்கிட்டு போகலாம்.

நரகாசூரன் பாவம் சார் அவனை விட்டுவிடுங்கள்.. இன்னும் எத்தனை நாள் தான், செத்த பாம்பையே அடித்துக் கொண்டு இருப்பீர்கள். நரகாசூரன் இறந்த நாள் இல்லை தீபாவளி என்று இப்போதாவது புரிந்து கொள்ளுங்கள். நரகாசூரன் இறந்த நாள் தான் தீபவாளி என்று உங்கள் பிள்ளைகளுக்கு மாற்றி சொல்லிக் கொடுத்து வளரும் சமூதாயத்தை சிந்திக்க விடாமல் செய்து விடாதீர்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதேநீங்கள்  நடக்கும்.

# - 39 -

சாப்பிட வாங்க....

வெளிச்சத்திற்கு வாங்க என்று சொல்லி விட்டு சாப்பிட வாங்க என்று சொல்றீங்களே என்று யோசிக்காதீர்கள்.. இந்த வாரம் சொல்ல வரும் விஷயம் அது பற்றி தான்.

எல்லோர் வீட்டிலும் தான் சமையல் செய்கிறார்கள். இன்றைய நாளில், இரண்டு பேரும் வேலைக்கு போகும் குடும்பத்தில், முதல் நாளே காய்கறிகளை நறுக்கி பிர்ட்ஜில் வைத்து விட்டு, மறுநாள் பக்கத்து பிளாட்டில் உள்ளவர்கள் வீடு வரை சத்தம் போடும் (குக்கர்) பாத்திரத்தில் வைத்து சமையாவிட்டாலும் பரவாயில்லை, soft ஆனால் போதும் என சூட்டோடு சூடாக அவசர அவசரமாக பிளாஸ்டிக் டப்பாவில் அடைத்துக் கொண்டு என எதையோ சாப்பிடுகிறதை பார்த்தால் ஒரு பக்கம் சிரிப்பு வரும். ஒரு பக்கம் இன்றைய பெண்களின் நிலையை நினைத்தால் பாவமாக இருக்கும்.

சமையல் செய்வதற்கு முன்பெல்லாம் மண் பாத்திரம் வைத்து இருந்தார்கள். அது கால போக்கில், பித்தளை, வெண்கலம், இரும்பு என தொடர்ந்து எவர்சில்வர் அலுமினியம் மட்டும் அல்ல பிளாஸ்டிக் வரை வந்து விட்டது.

பாத்திரம் கழுவுவது சுலபம் என பிளாஸ்டிக் எவர்சில்வர், அலுமினியம் என பயன்பாட்டிற்கு வந்தால் ஆரோக்கியத்தை விலை கொடுத்தாலும் வாங்க முடியுமா? வியாதிகள் வரிசை கட்டி வீட்டு வாசலில் வந்து நிற்கும்.

ஆரோக்கியமான வாழ்வுக்கு சாப்பாடு மட்டுமல்ல அது சமைக்கும் பாத்திரம் மிகவும் முக்கியம் சமையல் செய்பவரின் மன நிலை, சாப்பாடு பரிமாறுதல், சாப்பிடும் முறை, சாப்பிட்ட பிறகு எப்படி

எழுந்திருப்பது என ஒரு பெரிய பட்டியலே நமது கலாச்சார மரபில் இருக்குது. இன்றைக்கு இந்து என்று வாய் நிறைய சொல்பவர்களுக்கு கூட இவை எல்லாம் தெரியுமா என தெரியவில்லை.

அதனால் தான் முன்பெல்லாம் ஒழுக்கமான குடும்பத்தில் உள்ளவர்கள் 'பர அன்னம்' சாப்பிடமாட்டார்கள். அதாவது பிறர் வீட்டில் சமைத்ததை சாப்பிடமாட்டார்கள். அதெல்லாம் இப்போ எங்கே சார் இருக்கு என்று கேட்கிறீர்கள் புரிகிறது நமது பரிகார முறைகள் கூட இந்த உணவு பழக்கத்தை ஒட்டியே தான் இருக்கும். அதனால் தான் பரிகாரங்கள் பலிதமாகிறது என்பது கூடுதல் செய்தியாக குறித்து கொள்ளுங்கள்.

உங்கள் வீட்டில் சத்தம் போடும் பாத்திரம் இருக்குதா? அதாங்க குக்கர். அதுவும் அலுமினியத்தில் இருக்குதா? ஆமாம் என்று சொல்லி விடாதீர்கள். காரணம் அது தான் ஆரோக்கியத்திற்கு ஆபத்து. தைராய்டு, கொழுப்பு கட்டி என கேன்சர் வரை சொல்ல ஒரு பெரிய பட்டியலே இருக்கு. அது எந்த திசா புத்தியில் வந்துள்ளது என்பதை வைத்து பண இருப்பு குறைவதை சொல்ல முடியும்..

குக்கரில் சமைப்பதால் அது மிருதுவாக்க படுகிறது அது சமைக்க படுகிறதா என கேட்டு பாருங்கள்.. இப்படியே நாங்கள் பழகி விட்டோம் என்று தான் பலரும் சொல்லுவார்கள். இன்னும் வெளிப்படையாக சொல்ல வேண்டும் என்றால், மூடிய பாத்திரத்தில் சமைக்க கூடாது.

அலுமினிய குக்கர்மட்டும் இல்லீங்க எங்க வீட்டில் நான்ஸ்டிக் கூட இருக்குதுன்னு சொல்றீங்களா..? அவ்வளவு தான் போங்க.. சிக்கலே இங்கே தான் ஆரம்பிக்கிறது.

அது மட்டுமா.. சுட சுட.. சாப்பாட்டை அந்த பிளாஸ்டிக் டப்பாவில் (bpo free என்றாலும்) போட்டுக்கிட்டு தான் ஆபிசுக்கு அரக்க பறக்க போவோம் என்று சொல்பவர்களா நீங்கள்.. உங்கள் வீட்டில் நோய் என்ற அரக்கன் அழைக்காமலே வந்து உட்கார்ந்து விடுவார்.

இதெல்லாம் தப்புன்னு புரிந்து கொள்ள முடிகிறது. இதை எப்படி சரி செய்வது என உங்களை நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள். மாற்றம் உங்களிடம் இருந்து வர வேண்டும் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

ஆரோக்கியமான வாழ்க்கை வேண்டுமா? சம்பாதிப்பதில் பாதிக்கு மேல் மருத்துவத்திற்கு செலவு செய்ய வேண்டுமா என்பதை நீங்கள் தான் முடிவு செய்ய வேண்டும்.

சரி இப்போ சமையல் பாத்திரங்களையும் கிரக காரகங்களையும் புரிந்து கொள்வோம்.. மண் பாத்திரம் செவ்வாய், சமையல் உணவுகளை அரைத்து சாப்பிடும் பல் செவ்வாய், இதில் உணவு சமைத்தால் ரத்த விருத்தி,, ரத்தம் சுத்தமாதல் மாரடைப்பு வராமல் இருத்தல் என பல நன்மைகள் உண்டு.

வெள்ளி சுக்கிரன் சமைத்த பண்டங்களை வெள்ளி தட்டில் வைத்து சாப்பிடுவார்கள், இது குடும்ப விருத்திக்கு நல்லது என்பதால் தான் மாப்பிள்ளைக்கு வெள்ளி தட்டில் சாப்பாடு, வெள்ளி டம்பளிரில் பால் வெள்ளி சொம்பில் குடிக்க ஜலம் என தருவார்கள்.

இரும்பு பாத்திர சமையல் என்பது சனி காரகம் கொண்டது. இதுவும் சமையலுக்கு ஏற்றதே. இதில் செய்த சமையல் உடனே வேறு ஒரு பாத்திரத்திற்கு மாற்றி விட வேண்டும் என்பதில் கவனமாக இருக்க வேண்டும். இரும்பு பாத்திரத்தில் சமைக்கலாமே தவிர அதிலேயே உணவு பொருட்களை வைத்து இருக்க கூடாது.

வெண்கலப் பாத்திரம் புதன் காரகத்துவம் கொண்டது. இதில் சமைத்து சாப்பிட்டால் சோர்வு இன்றி புத்துணர்ச்சியாக இருப்பதை உணர முடியும். இந்த வெண்கல பாத்திரத்தில் சமைத்த உணவு பொருட்கள் சீக்கிரம் கெட்டு போகாது வெண்கல பானையில் பொங்கல், தொட்டுக் கொள்ள கத்திரிக்காய் கொஸ்து செய்து சாப்பிட்டு பாருங்கள் அப்புறம் தெரியும் அதன் சுவை.

செப்பு பாத்திரம் குரு காரகத்துவம் கொண்டது. அதனால் தான் நித்திய கர்மானுஷடானம் செய்யும் பஞ்ச பாத்திரம் வெள்ளி வாங்க வசதி இல்லாதவர்கள் வீட்டில் செப்பு பாத்திரத்தில் இருக்கும். இப்பவும் ஐடியில் வேலை செய்யும் சிலர் செப்பு பானையில் தண்ணீர் என படித்து விட்டு வாட்டர் கேன் செப்பு பாத்திரத்தில் உள்ளதாக வாங்கி வைத்துக் கொள்வதை பார்க்கலாம்.

எப்போதாவது பயன்படுத்தும் பாத்திரம் ஈயம் தான். ஈய சொம்பில் ரசம் என்றால் ஒரு பிடி பிடிக்காமல் இருப்பார்களா? இதில் சுக்கிரன் சனி காரகத்துவம் கொண்டது. வெள்ளீயம் தான் நல்லது இன்னும் சிலர் வெண்கல பாத்திரத்தில் உள் பூச்சாக வெள்ளீயத்தை பூசி வைத்துக் கொள்வார்கள்.

பீங்கான் கண்ணாடி, மற்றும் ராகு காரகம் பெற்ற பிளாஸ்டிக் (மைக்ரோவேவ் safe) என வகைபடுத்தி சொல்ல நிறையா இருந்தாலும், ஆரோக்கியம் வேண்டுபவர்கள் அலுமினியம் கூடாது, நான்ஸ்டிக் கூடவே கூடாது என்பதில் உறுதியாக இருக்க வேண்டும்.

அது மட்டுமா...? குக்கர் போல மூடி வைத்து சமைப்பதை தவிர்த்தல் நோய்க்கு இடம்கொடுக்காமல் இருக்கலாம். எவர் சிலவர் பாத்திரங்கள் பரிமாற மட்டுமே (serving) என புரிந்து கொள்ளுங்கள்.

சத்தான உணவா? பூச்சி அரிக்காத காயா என பார்த்து பார்த்து வாங்கும் நாம் உடலுக்கும் மனதிற்கும், சுவைக்கும், ஆரோக்கியம் தரும் பாத்திரத்தை பயன்படுத்த தயக்கம் கொள்ளலாமா?

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# - 40 -

“பல்லை உடைப்பேன்” என்று யாராவது தப்பாக பேசிவிட்டால், கோபத்தில் இப்படி திட்டுவோம். பேசுவது நாக்கு உதை வாங்குவது பல்லா என்று மெதுவாக யோசித்து பார்த்தால், நமக்கு என்னவோ மாதிரி தான் இருக்கும்.

சும்மா பல்லை காட்டாதே என்று எதற்கு எடுத்தாலும் சிரிப்பவர்களை சொல்லுவாங்க. பார்த்து இருப்போம்.

பல் தேய்க்கும் பழக்கம் இந்தியர்களிடம் குறிப்பாக தமிழர்களிடம் அதிகம் உண்டு. தமிழ் அல்லாத வேறு சில மாநிலங்களில், வாய் நிறைய பீடாவை போட்டு குதப்பி கொண்டு, வெள்ளை நிறம் ஒரு போதும் தெரியாதபடி, சிவப்பு நிறமாகவே வைத்து இருப்பார்கள்.

அதெல்லாம் சரி, இந்த பல் எலும்பா சதையா என்று கேட்டால், யோசிக்க வேண்டிய விஷயம் தான் என சொல்ல தோன்றும். சின்ன வயதில் பால்பல் விழுவதும் மீண்டும் முளைப்பதும் குழந்தை வளர்ப்பில் ஒரு அம்சம் தான். வயதான பிறகு விழும் பற்கள் தான் மீண்டும் இயற்கையாக முளைப்பது இல்லை.. செயற்கையாக (முளைத்து) வாங்கி விடுகிறோம்.

இந்த பல்லை வைத்து இந்த வாரம் ஒரு சோதிட குறிப்பு சொல்ல போகிறேன்.. இது எதிர்கால பலன் சொல்ல அல்ல. அந்த பல்லுக்கு உரியவர்களின் இயல்பான குணத்தை தெரிந்து கொள்வதற்காக.

அட பல்லில் கூடவா? என யோசிக்காதீர்கள். அதனால் தான் பண்டைய நாளில் பெண் பார்க்க போகும் போது, பெண்ணை பாட சொல்லுவார்கள். வாய் அசைவில் தெரியும் பற்களை கொண்டு அந்த பெண்ணின் குண நலனை கண்டு பிடித்து விடுவார்கள்.

இன்றைய நாளில் அது எல்லாம் இல்லை தான் என்றாலும் காதல் செய்யும் போதாவது இதை தெரிந்து கொள்ள வேண்டாமா? காதல் கை கூடி கல்யாணம்னு நடந்தால் அறுபது கிலோ தாஜ்மகாலுடன் எப்படி குடித்தனம் செய்ய வேண்டும் என தெரிந்து கொள்ள வேண்டாமா? அதுக்கு தான் இந்த பல் சோதிடம்.

இதற்கு நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் பல்லை அளந்து குறித்து கொள்ள வேண்டும். இது எப்படிங்க ஐயா, என கேட்காதீர்கள்.. கண்களில் பார்த்து தான். அதுக்காக ஸ்கேல் பேப்பர் என வைத்தா அளவு எடுக்க முடியும்.. (சிரிக்காதீர்கள் பல் தெரிகிறது)

சதுரம் நீள் வட்டம், செவ்வகம் முக்கோணம் என அவைகளை வகைப்படுத்திக் கொள்ளுங்கள். இந்த பற்கள் வாயை திறந்ததும் தெரியும் அந்த முதல் வரிசை பற்கள் தான் என்பதை குறித்துக் கொள்ளுங்கள்.. காரணம் எல்லா பற்களும் ஒரே மாதிரியாக ஒரே அளவினதாக இருக்காது என்பது தான் மனிதனுக்கு இயற்கை தந்த பரிசு.

அந்த முதல் வரிசை பற்களிலும் மேல் வரிசை பற்களை மட்டும் வைத்துக் கொண்டு சொல்ல வரும் குறிப்புகளை சரி பார்த்துக் கொள்ளுங்கள்.

பல் செவ்வாய் என்பதால் மேல் செவ்வாய் கீழ் செவ்வாய் என்பது போல புரிந்து கொள்ளுங்கள். கைரேகை சோதிடத்திலும் செவ்வாய் ரேகை (mars line) மேல் செவ்வாய் கீழ் செவ்வாய் என சொல்லுவார்கள். இது பயண ரேகைக்கு பக்கத்தில் இருக்கும். அந்த கைரேகை பற்றிய குறிப்புகளை இன்னொரு வாய்ப்புகளில் சிந்திக்க வைத்துக் கொள்வோம்.

இந்த சிந்தனையில், முதலில் நீள் வட்டமான ஓவல் வடிவிலான பற்களை பார்க்கலாம். முத்துப்பல் என சொல்லும் இவர்கள் படைப்பாற்றல் நிறைந்தவர்கள். அன்றைய நாட்களில் உள்ள சினிமா நடிகை முதல் இன்றைய நாட்களில் உள்ளவர்கள் வரை என ஒரு

குட்டி பட்டியல் போட்டு பார்த்தால் உங்களுக்கே புரியும். சீக்கிரம் சோர்வடையும் இவர்கள் அன்புக்குரியவர்களாக இருப்பார்கள் வசதிகள் இருந்தாலும் கனவுகளும் வேதனைகளும் கூடவே இருக்கும்.

செவ்வக வடிவ பற்கள் உடையவராக இருந்தால், பலகை மாதிரி இருக்கு என்பார்கள். இவர்கள், வாழ்க்கையில் இது சரியா...? தவறா..? அவர் ஏன் அப்படி சொன்னார்? இப்படி சொல்லி இருக்கலாமே? என்று என்பது போல ஆய்வு செய்து முடிவு எடுக்கும் குணம் உடையவர்களாக இருப்பார்கள். அதனால் கற்பனை நிறைந்தவர்கள் என்று 'சட்' என சொல்லி விடலாம். இவர்கள் விரும்பியதை கேட்டு பெறுவார்கள். தட்டி கூட பறித்து விடுவார்கள். காதலும் அன்பும் இருந்தாலும், உணர்ச்சிகள் இல்லாதவர்கள் போல தான் உறவுகளில் இருப்பார்கள். என்று சொல்லி விடலாம்.

சதுரமான பற்களை உடையவர்களை அரிசி பல் காரர் என்று சொல்லுவார்கள். இவர்கள்,,கொஞ்சம் ஒழுங்கு முறையை கடைப்பிடிப்பவர்களாக இருப்பார்கள். காதல் செய்பவராக இருந்தல கூட, வீட்டில் வந்து முறையாக பெண் கேளுங்கள்.. நான் வீட்டை விட்டு அப்பா அம்மாவுக்கு தெரியாமல் வர மாட்டேன் என்று சொல்வது போல தனுக்குள் ஒரு சுய கட்டுப்பாட்டுடன் இருப்பார்கள்

இவர்கள் அமைதியாக இருந்தாலும் ஆற்றல் மிக்கவராக இருப்பார்கள். சரியான முடிவுகளை சரியான நேரத்தில் எடுத்து மற்றவர்களின் பாராட்டை பெறும் அளவுக்கு திறமை உள்ளவர்களாக இருப்பார்கள். அதனால் தான் இவர்கள் பெரும்பாலும் அலுவலகத்தில் நிர்வாக பொறுப்பில் இருப்பார்கள். இருந்தாலும் அன்பானவர்கள், கண்டிப்பனவர்களாக இருப்பார்கள்.

கவலை இல்லாமல் வாழ நினைப்பவர்கள் அதாவது ஒரு மாதிரி ஜாலி டைப் ஆசாமிகள் தான் முக்கோண வடிவ பற்கள் உள்ளவர்கள் இன்றைய நாளை அனுபவிப்போம் வாழ்வோம். நாளை

பற்றிய கவலை நமக்கு எதற்கு என்பது போன்ற எண்ணம் உள்ளவர்கள்.

சுதந்திரமாக இருக்க வேண்டும் என நினைக்கும் இவர்கள் அடித்தளம் இல்லாமல் கட்டிடம் கட்டுவது போல, பொறுப்பின்றி இருப்பவர்களாக இருப்பார்கள். சிக்னல் கிடைத்தாலும் சிக்கலும் வரும் என்பதை புரிந்து கொள்ள இவர்களுக்கு தாமதமாகும்.

செவ்வாய் காரகம் கொண்ட பற்களை கொண்டு இது போல நிறைய சொல்ல முடியும். இது தான் உணர்வுகளை வெளிப்படுத்தும் ஆளுமைக்குரிய கிரகம் என்பதால் தான் பல்லுக்கு காரகம் வகிக்கும் செவ்வாயை வைத்து பற்களின் அமைப்பை கொண்டு அவர் தம் இயல்பான ஆளுமை உணர்வுகளை சொல்லி விடலாம்.

மனித இனத்திற்கு மறைந்து வளர்ந்து மாறுபடுவது, செவ்வாய் காரகம் வகிக்கும் பற்களும் கேது காரகம் வகிக்கும் முடியும் தான்.

இந்த இரண்டில் தான் பெண்கள் மட்டுமல்ல ஆண்களும் கவனமாக இருப்பார்கள். கொஞ்சம் வெள்ளை ஆனால் கூட “டை” அடித்துக் கொள்வது, பற்களை ப்ளீச்சிங் செய்வது என இன்றைய சூழலுக்கு ஏற்ப சொல்லலாம்.

“அங்க வித்யா” என்ற சாஸ்திர முறைப்படி சோதிட சிந்தனைகளை சேர்த்து சொன்னால் ஜாதகத்தை பார்த்து அவரது குண அமைப்புகளை சொல்லி விடலாம் என்றால் ஆச்சரியமாக தானே இருக்கும்.

சரி உங்கள் பல்லை காட்டுங்க..(ஹி.. ஹி...)

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# -41-

இப்போ பாருங்க, பெண்கள், ஆண்களைப் போல உடை போடுகிறார்கள். ஜீன்ஸ் டீ ஷர்ட் லேக்கின்ஸ், இப்படி பெயர் தெரியாத எத்தனையோ உடைகள். அது சரி என இருந்தால் பெண்களை போல காதில் மூக்கில் என நகை போடுகிறார்கள். ஆக, ஆணாகவும் இல்லை பெண்ணாகவும் இல்லை.

இந்த பக்கம் பார்த்தல் இறந்த வீட்டிற்கு ஒப்பாரிக்கு செல்வது போல தலையை விரித்து கொண்டு எங்கும் திரிகிறார்கள். இது போல தலையை விரித்து கொண்டு இருப்பவர்களை, திருச்செந்தூர் திருப்புகழில் அருணகிரியார் “விரித்த குஞ்சியர்” - அரக்கியர்கள் என்று சொல்லுவார்.

ஆக, இதிலும் பெண்களும் இல்லை, ஆண்களும் இல்லை அரக்கியர்கள் என்பது போல. வரும் காலங்களில் இந்திய கலாச்சாரமாக சொல்லும் சேலை என்ற உடையே இல்லாது போயிடுமோ என்று தோன்றும் அளவிற்கு அவர்கள் ஆடை அலங்காரத்தில் இருக்கிறார்கள்.

முன்பெல்லாம் வெளிநாட்டில் இருந்து வரும் ஏர் இந்தியா போன்ற விமானங்களில், பணிப்பெண்கள், சேலை கட்டி தான் சேவை செய்வார்கள். இந்தியர்களின் கலாச்சாரம் என்று காட்டுவதற்கு.

இப்பவும் கூட பாருங்கள், வெளிநாட்டில் இருந்து சுற்றுலா வரும் வெளிநாட்டு பெண்கள் தங்கள் அணிந்து இருக்கும் உடைக்கு மேல் சேலை கட்டிக் கொண்டு வருவதை மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோவிலில் நான் பல முறை பார்த்து இருக்கிறேன்.

எது வாழ்க்கை என தெரியாமலே எதையோ நினைத்து மற்றவர்களுக்கு மகிழ்ச்சியாக வாழ்கிறோம் என போலியாக காட்டிக்

கொண்டு கை நிறைய மாத்திரை பை நிறைய கடன் அட்டைகள், உடம்பெல்லாம் டாட்டூஸ், ஆணுக்கு பெண்கள் சமம் என்பது போல போலி கௌரவத்தில், என்னமோ போல் வாழ்ந்து கொண்டு மடிந்து போகிறார்கள். என இதுக்கு மேல் சொன்னால் நம்மை ஒரு மாதிரி பார்ப்பார்கள் எனினும் இவைகளை சொல்ல காரணம் இவர்களுக்கு தான் இந்த வார செய்தி..

இந்த பெண்களை நினைத்தால் “அந்தோ பரிதாபமாக” இருக்கிறது. இவர்களுக்கு என்ன செய்வது என்று தெரியாமல் எதையோ செய்து கொண்டு இருக்கிறார்கள். அதற்கு காரணம் இவர்களுக்கு ஒரு நல் வழிகாட்டி இல்லை என்பது புரிகிறது. சென்ற தலைமுறை செய்த தவறு இந்த தலைமுறை அதை அனுபவித்துக் கொண்டு இருக்கிறது.

‘பதினாறு வயதினிலே” அன்றைய நாளில் பருவம் அடைந்த பெண்கள், இன்றைய நாளில் பத்து வயதில் பருவம் அடைந்து விடுகிறார்கள். உளவியல் அடிப்டையில் பருவம் அடைந்த மூன்று முதல் ஐந்து வருடத்திற்கு மேல் சும்மா இருக்க முடியாது என்பதால், இன்றைய நாளில், இளவயதில் காதல் என தடம் மாறி சில சமயம் தடுமாறியும் போகிறார்கள்.

கல்லூரி படிப்பு இவர்களுக்கு பட்டம் தருகிறதோ இல்லையோ இவர்கள் விரும்பியோ விரும்பாமலோ ஒரு வாழ்க்கை துணையை தந்து விடுகிறது. சிலருக்கு குழந்தையையும் தந்து விடுகிறது “இது என் ஆளு’ என கல்லூரி நாட்களில், பாய் பிரண்ட் இல்லை என்றால் அவர்கள் சமூக அந்தஸ்து குறைந்தவர்களாக மதிக்கும் படி ஒரு சூழலுக்கு தள்ளப்படுகிறார்கள்.

பத்து வயதில் பருவம் எய்தியவர்கள், பதினெட்டு வயதில் திருமணம், இருபத்தி ஒரு வயதில் குழந்தை, இருபத்தி ஐந்து வயதில் விவாகரத்து இருபத்தி எட்டு வயதில் மறுமணம் என மனம் மாறி, தடம் மாறி, மனம் போன போக்கில் ஓடுகின்ற தண்ணீரில் உதிர்ந்து விழுந்த சருகு போல ஓட்டத்திற்கு ஏற்ப ஓடிக் கொண்டு இருக்கிறார்கள்.

இதை ஏற்றுக்கொள்ளும் பக்குவத்தில் அநேகமாக பெற்றோர்களும் வந்து விட்டார்கள் என்பது இன்னொரு வருத்தமான செய்தி தான்.

இதெற்கெல்லாம் ஒவ்வொன்றாக, சோதிட காரணம் சொல்லலாம் என்றாலும் இவர்களுக்கு தாம்பத்த்யத்தை புரிய வைக்க ஒரு குட்டி பயிற்சி சொல்ல போறேன். இதை எல்லோரும் செய்து பார்க்கலாம். சரி, என்னோடு பயிற்சிக்கு வாருங்கள்.

ஒரு நாற்காலியில்/சோபாவில், அமர்ந்து இருந்தால் அப்படியே நகராமல் இருங்கள்... (இப்போ யாரு கீழே உட்கார பழகி இருக்கிறார்கள் என்று கேட்கிறீர்கள் புரிகிறது)

கைகள் இரண்டையும் ஒன்றோடு ஒன்றாக கோர்த்துக் கொள்ளுங்கள். (வணக்கம் சொல்வது போல) இடது கையில் உள்ள ஒவ்வொரு விரல்களும், வலது கையில் உள்ள ஒவ்வொரு விரலை தொடட்டும் ஆனால்,

சனி விரல் என்று சொல்லும் நடுவிரலை உட்புறமாக மடக்கி கொள்ளுங்கள். சனி விரல் எனும் நடுவிரல் உள்ளங்கையை தொட்டுக் கொள்ளட்டும் அது மடக்கியே இருக்கட்டும்

கண்கள் திறந்தே இருக்கட்டும். இப்போது தான் பயிற்சி தொடங்குகிறது

சில வினாடி அமைதியாக இருந்து விட்டு இரு கைகளிலும் சுக்கிர விரல் என்று சொல்லும் பெருவிரலை மெதுவாக சிறிது விலக்கி பாருங்கள்.. எளிதாக விலகிவிடும். (மற்ற விரல்கள் ஒன்றை ஒன்று தொட்டுக் கொண்டே இருக்கட்டும்)

பெருவிரல் தான் பெற்றோர்கள்/பெரியோர்கள்... ஆலோசனை சொல்லும் நல்ல சான்றோர்கள், சில காலத்திற்கு பிறகு நம்மை விட்டு

பிரிந்து விடுவார்கள். சில குழந்தைகள் பெருவிரலினை தான் சூப்புவார்கள் இதற்கு காரணம் என இன்னொரு வாய்ப்பில் சிந்திப்போம்.

அடுத்து, குரு விரல் என்று சொல்லும் ஆள்காட்டி விரல்களை விலக்கி பாருங்கள் அதுவும் எளிதாக விலகிவிடும். அது தான் உடன் பிறந்தவர்கள். குரு மார்கள், நல் ஆசிரியர்கள். அவர்களும் நம்மை விட்டு ஒரு காலத்தில் விலகிடுவார்கள்.

சனி விரல் என சொல்லும் நடுவிரல் மடக்கியே இருக்கட்டும் நடுவில் அதை கொண்டு வரவேண்டாம்.

அடுத்து, புதன் விரல் என்று சொல்லும் சுண்டு விரலை விலக்கி பாருங்கள் சுலபமாக விலகிவிடும். நம் பிள்ளைகள் மற்றும் நண்பர்கள் தான் அவை. நம்மை விலக்கி விடும் சுண்டு விரல்கள்.

இப்போ ஆத்ம காரகன் என சொல்லும் சூரிய விரல் என சொல்லும் மோதிர விரலை (பவித்ர விரல்) விலக்கி பாருங்கள். ம்... ஹூம்.... விலக்குவது சிரமமாக இருக்கும்.

அது தான் வாழ்க்கை துணை. அது கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள உறவு யார் பிரிந்தாலும் நம்மை விட்டு பிரியாத யாரோ ஒருவர் வீட்டில் இருந்த வந்தவள்/வந்தவர். இதை கௌரவிக்கத்தான் இந்த விரலில் மோதிரம் போடுகிறோம். அது மோதிர விரலாக கௌரவம் பெறுகிறது. Wedding ring என்று ஆங்கிலத்திலும் பிற மதத்திலும் சொன்னாலும், Well beingக்கு போடும் மோதிரம் என்றால் கூட நோக்கம் இது தான்.

இதை புரிந்து கொள்ளாமல், அவசர முடிவு எடுத்து யாருக்காகவோ எதற்காகவோ, விவாகரத்து வேண்டி, நீதிமன்றத்தில் குடித்தனம் செய்வது, நியாயமாகவா இருக்கிறது என கேட்டு பாருங்கள். சொல்ல வரும் விஷயம் உங்களுக்கே புரியும்.

நடுவிரலை பற்றி எதுவும் சொல்லவில்லை என நினைப்பது புரிகிறது,, அது தான், தன் முனைப்பு எனும் EGO அது தன்னடக்கத்துடன் பணிந்து இருந்தால் தான், கணவன் மனைவி உறவு வலுப்படும். கண்ணியமான குடும்பம் கட்டுக்கோப்புடன் இருக்கும்.

இந்த பயிற்சியில் பங்கு பெற்றவர்கள் பயன் பெற்றதை மற்றவருக்கு சொல்லுங்கள். சொல்ல வந்த விஷயம் புரிந்தால் பால சோதிடத்திற்கு நன்றி சொல்லுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# -42-

இப்போ சனி பெயர்ச்சி வருதாமே...!!நமக்கு எப்படி இருக்கப் போகுதோ என்று அறிந்து கொள்ளும் எண்ணம் எல்லோருக்கும் இருக்கும்.

ஒவ்வொரு சனி பெயர்ச்சி வரும் போதும், சிலருக்கு அஷ்டம சனியாக, சிலருக்கு அர்த்தஷ்டம சனியாக சிலருக்கு ஏழரை சனியாக, சிலருக்கு ஜென்ம சனியாக இப்படி இருக்கும்.

பொதுவாக சனி பெயர்ச்சி பலன் சொல்பவர்கள் ராசியை வைத்து சனியின் பார்வையை வைத்து இது போல வேறு சில காரணிகளை அவரவர் அனுபவத்திற்கு ஏற்ப சேர்த்து சொல்லுவது வழக்கம்.

எப்படி இருந்தாலும் நாம் பலன்களை தெரிந்து கொள்ளாமல் விடுவோமா என்ன...?

அதெல்லாம் சரி இந்த சனி பெயர்ச்சி எப்படி இருக்கும் சொல்லுங்க என்று கேட்பவர்கள், பால ஜோதிடம் வழங்கும் சனி பெயர்ச்சி பலன்கள் புத்தகத்தை வாங்கி தெரிந்து கொள்ளுங்கள்.

அஷ்டமத்து சனி என்பது ஒருவரது ராசிக்கு எட்டாவது இடத்தில் சனி வருவதுதான். இந்த சனிப்பெயர்ச்சியில் கும்பத்திற்கு வரும் சனி என்பதால் கடக ராசி அன்பர்களுக்கு இது அஷ்டம சனியாக அமைகிறது.

இப்போ அஷ்டம சனி ஒவ்வொரு சனி பெயர்சியிலும் ஒரு சிலருக்கு வரும் என்ற நிலையை சொல்லாமல் இவை எல்லாம் இருந்தால் அது அஷ்டம சனியை போல என்று ஒரு தமிழ் பாட்டு சொல்கிறது அதை தான் உங்களுடன் இந்த வாரம் பகிர்ந்து கொள்கிறேன்..

அந்த பாட்டை எழுதியவர் நம்ம பாட்டி தான்.. ஆம் ஔவையார் அருளிய தனிப்பாட்டில் வரும் அந்த பாடலை சுவைத்து பாருங்களேன்.

***காலையிலே பல்கலை நூல் பயிலாத தலை மகனும்***
***ஆலை எரி போன்ற அயலானும்***
***சால மனைக் கட்டழிக்கும் மனையாளும்***
***இம் மூவர் தனக்கு அஷ்டமத்து சனி***

எளிதாக பொருள் விளங்கும் இந்த பாடலில், சொல்ல வரும் செய்திகளை பாருங்கள், அதிகாலையில் எழுந்து அறநூல்களை படிக்காத குடும்பத்து தலைவன் என்றால் அங்கே அஷ்டமத்து சனி என்கிறார்..

ஒரு குடும்பத்து தலைவன் அதிகாலையில் எழுந்தால், அந்த குடும்பத்தில் உள்ளவர்களும் எழுந்திருப்பார்கள் என்ற கருத்தை சொல்ல வரும் இந்த அற வாழ்க்கையை நாம் தெரிந்து கொண்டால், அஷ்டமத்து சனிக்கான பரிகாரம் நமக்கு எளிதாக புரிந்து கொள்ள முடியும் இல்லையா..

ஆலை எரி போன்ற எனும் போதே நமக்கு வட சென்னை தான் நினைவில் வரும். ஆலையில் இருந்து வரும் நெருப்பு எத்தனை சூடாக இருக்குமோ அத்தனை சூடாக அண்டை வீட்டு தோழர்கள் அமைந்து விட்டால் அங்கே அஷ்டமத்து சனி என்கிறார். இன் சொல் பேச வேண்டும் அதுவே ஆரோக்கியமான நல்லுறவை பெற்று தரும் என்பதை புரிந்து கொள்ள முடிகிறது தானே.

'யாவர்க்குமாம் இன்னுரை தானே" என்று திரு மூலர் சொல்வது போல அன்போடு அண்டை அயலாருடன் நட்பு கொண்டு பழகுதல் அஷ்டம சனிக்கான எளிய பரிகாரம் என்பதை புரிந்து கொள்ள முடியும் இல்லையா.

வரவுக்கு மீறிய செலவு செய்யும் மனையாட்டி இருந்து விட்டால் அதுவும் தனக்கு அஷ்டம சனி என்று ஔவையார் சொல்வதை நோக்கும் போது, அஷ்டம சனி வேறு எங்கேயும் தேடி பார்க்க தேவையில்லை என்பது போல தோன்றுகிறதா...?

வாரம் தோறும் பியூட்டி பார்லர் போகும் பெண்கள், பீரோவில் அடுக்கி வைத்த ஆடைகளை ஒதுக்கி விட்டு, தேவையிலாமல் ஆடைகளை வாங்கி குவிக்கும் இல்லத்தரசி, வீட்டில் திண் பண்டங்களை செய்ய சோம்பல் பட்டு, பாக்கெட்டில் அடைத்து வைத்த ஆரோக்கியமில்லாத திண்பண்டங்களை வாங்கி திண்பதுடன், தன் பிள்ளைகளுக்கும் தந்து பணத்தை விரயமாக்கும் மனையாட்டி என ஒரு குட்டி பட்டியலை போட்டு காட்டாமல், சுருக்கமாக வரவுக்கு மீறிய செலவு செய்யும் மனையாட்டி என்று குறித்து சொல்லி இந்த மூவரில் மூன்றுமோ ஏதாவது ஒன்று ஒருவருக்கு அமைந்து விட்டால் கூட, அது அவருக்கு அஷ்டம சனி என்று சொல்லுகிறார் ஔவையார்.

அது சரி அஷ்டம சனி என்றால் அத்தனை துன்பமா என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. ஏழரை சனியை விட அஷ்டம சனியை கூடுதலாக கவனத்துடன் இருக்க வேண்டும் என்பது தான் குறிப்பு. ஏன் இப்படி என்றால், சனி ராசிக்கு எட்டாம் இடத்தில், வரும் போது, சனியின் பார்வை, 10ம் இடம், 2ம் இடம் மற்றும் 5ம் இடத்தில் விழுகிறது.

அதனால் 10ம் இடமான தொழில் ஸ்தானத்தை பாதிக்கும். 2ம் இடமான குடும்பத்தை பாதிக்கும். 5ம் இடமான பூர்வ புண்ணிய பலன்களை பாதிக்கும்.

ஒரு மனுஷனுக்கு நிம்மதியை தருவதே இந்த மூன்று தானே.. அந்த மூன்றிலும் பாதிப்பு என்றால் எப்படி என கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அதனால் தான் அஷ்டம சனி என்றால் அலட்சியம் காட்ட கூடாது என்று எச்சரிக்கையாக சொல்கிறோம்.

இத்தனை பிரச்சனைகளை அஷ்டம சனி தரும் என்றாலும் ஒரு சிலருக்கு அஷ்டம சனி நன்மை தரும் சூழலும் உண்டு.

ஒருவர் ஜாதகத்தில் ராசி அல்லது இலக்கின கேந்திரத்தில் ஆட்சி உச்சம் பெற்றோ லக்ன யோகராகி அவர் திசை நடைபெறும் காலங்களில் அஷ்டமத்து சனி வந்தால் ஜாதகருக்கு பூமியாலும் மனையாலும் வாகனத்தாலும் யோகம் அமையும். ஆனாலும் மன சஞ்சலம் இருக்கும்.

ஒருவர் ஜாதகத்தில் தனாதிபதி லாபாதிபதி திசை நடந்து ஆட்சி உச்சம் நல்ல இடங்களில் இருந்து சனிக்கு நட்பு கிரகமாக இருந்தால் அஷ்டமத்து சனிநடந்தாலும் அரசியல் முலமாகவும் வெளிநாட்டு தொடர்பாலும் யோகத்தை அடைய வாய்ப்பு உண்டு. இருந்தாலும் உடல் நலன் பாதிப்பு ஏற்படும்.

இவர்களுக்கு பரிகாரமாக நாம் சொல்வது உணவும் ஒழுக்கமும் தான். முடிந்த வரை அதிகாலையில் எழுந்திருக்க பழகுங்கள்.. வாரத்திற்கு இரண்டு முறை, எட்டு மணி நேரமாவது மௌன விரதம் கடைப்பிடியுங்கள்.

வாய்ப்பு கிடைப்பவர்கள் சனிக்கிழமை தோறும், வெள்ளை எள்ளை தேவைக்கு ஏற்ப வறுத்து பொடித்து (மொத்தமாக பொடித்து வைத்துக் கொள்ள கூடாது) சாதத்தில் கலந்து உப்பு சேர்க்காமல் சாப்பிடலாம். சுவை விரும்பி என்றால், கொஞ்சம் வெல்லம் சேர்த்துக் கொள்ளலாம்.

பஞ்ச முக ஆஞ்சநேயர், பஞ்ச முக கணபதி போன்ற பஞ்ச முக மூர்த்திகளை வழிபாடு செய்யுங்கள்

தமிழ் படிக்கும் ஆர்வம் உள்ளவர்கள் திருஞானசம்பந்தர் அருளிய பச்சை பதிகத்தை தினமும் நாள் தவறாமல், படனம் செய்யுங்கள், அல்லது ஆடியோவில் கேளுங்கள்.

உங்கள் இருப்பிடத்திற்கு அருகில் உள்ள வன்னி மரத்தை வலம் வந்து வழிபாடு செய்யுங்கள்.

இவை எதுவுமே செய்ய முடியாது என்றால் சனி பிரதோஷத்தன்று திருமுறை படனம் செய்து சிவ வழிபாடு செய்யுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# -43-

அடைகாக்கும் இயந்திரத்தில் (இன்குபேட்டரில்) ஆயிரக்கணக்கான கோழி முட்டைகள் வைத்து குஞ்சுகளை பொரிக்க வைத்து கோழிக்குஞ்சுகளை உருவாக்குவதை நாம் கேள்வி பட்டு இருப்போம் அல்லது பார்த்து கூட இருப்போம்.

ஆனால் பாருங்கள், இப்போ, மனிதக் குழந்தைகளை இப்படி கருப்பை இல்லாமல் ஆய்வகத்தில் பிறக்க வைக்கின்றனர் என்ற செய்தியை கேட்டால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா.?

ஒரு தந்தையின் விந்தணுவையும் தாயின் கரு முட்டையையும் இணைத்து ஆய்வகத்தில் உள்ள ஒரு சிறப்பு அறையில் வளர்க்கிறார்களாம்.

இந்த அமைப்பில், ஒரு கருவின் வளர்ச்சியை ஒவ்வொரு கட்டத்திலும் பதிவு செய்து, பெற்றோர்கள் அதை தங்கள் மொபைல் போனில் பார்க்கவும் வசதி செய்து தருகிறார்களாம்.. குழந்தை கருவில் இருக்கும் போதே, குரலை பதிவு செய்து இசை பாடல் என நம் விருப்பத்திற்கு பதிவு செய்ய கூட முடியுமாம்.

அட ... ஆச்சரியமாக இருக்கிறதே என்று தான் எனக்கும் இந்த செய்தி மற்றும் இது தொடர்பான வீடியோ கிளிப் பார்த்தவுடன் தோன்றியது.. ( இதற்கான கிரக காரகத்தை இந்த வாரத்திலேயே, சொல்லி விட வேண்டும் என விரும்பினாலும் அதை இன்னொரு வாய்ப்பில் தனியாக பகிர்ந்து கொள்ள வரும் சந்தர்ப்பத்தில் சிந்திப்போம்

இப்படிப் பிறக்கும் குழந்தைகள் மிகவும் புத்திசாலியாகவும் ஆரோக்கியமாகவும் இருப்பார்கள் என்றால் யாராவது வேண்டாம் என்றா சொல்லுவார்கள்.

நம் மனிதகுலம் எங்கே செல்கிறது? மனித குலம் எதைநோக்கி செல்கிறது...என்ற கேள்வி நம்மில் பலருக்கும் இருக்கலாம். ஆனாலும்

பாருங்கள், ஒரு பெண் கர்ப்பமுற்று குழந்தை பெற்ற காலம் போய், இப்போ இப்படி நவீன குழந்தை பெறும் சூழல் வந்தாலும்,

இது போல சூழலும் வாய்ப்பும் இயற்க்கை அன்னைக்கு கிடையாது. இயற்கையை மட்டுமல்ல, நீரையும் நிலத்தையும் பெண்ணாக பார்க்கும் இந்த பூமியில் இயற்கையையும் நாம் பெண்ணாக, அன்னையாக கருதுவது தானேதமிழர் மரபு.

அப்படின்னா.. என்று நீங்க கேட்க வருவது புரிகிறது.. அதை சொல்வதற்கு தான் உங்களுடன் பகிர தகவலுடன் வந்து இருக்கிறேன்..

பஞ்சாங்கம் பார்க்கும் பழக்கம் உங்களுக்கு உண்டா? இல்லை என்றாலும் தினசரி காலண்டரில் தினமும் தேதியை கிழிப்பவராக நீங்கள் இருக்கலாம் இல்லையா. அப்படி தினசரி காலண்டரில் தேதியை கிழிக்கும் போது, அசைவ உணவை தவிர்ப்பவர்கள் அதில் உள்ள சிலவற்றை பார்த்து அமாவாசை, கிருத்திகை, பிரதோஷம், கரிநாள் இப்படி தெரிந்து கொண்டு இருப்போம். உங்களுக்கு நேரமும் வாய்ப்பும் ஆர்வமும் இருந்தால் இந்த மாதம் 29 ம் தேதியை பாருங்கள்..

அட அதில் என்னங்க விசேஷம் என்று கேட்டு, அவசர அவசரமாக காலண்டர் பக்கம் போகும் உங்கள் ஆர்வம் புரிகிறது. இந்த 29ந்தேதி அன்று "கெர்போட்டம்" என்று போட்டு இருக்கும் இல்லையா.

கெர்போட்டம் என்பது, ஏதோ விசேஷ தினமோ அல்லது மார்கழி மாதக் கோவில் திருநாளோ அல்ல, இது அடுத்த வருட மழைக்கணிப்பு முறைகளில் ஒன்று தான் இது.

சூரியனின் சுழற்சியை மையமாக கொண்டு தான் சூரியவழி மாதங்கள் பின்பற்றப்படுகின்றன. இது தவிர வானியல் நட்சத்திரங்களை இருபத்தேழையும், பன்னிரு ராசி மண்டலங்களாகவும் பிரித்துள்ளனர் என்ற அடிப்படையை நாம் அறிவோம்..

அந்த வகையில் தனுர் மாதம் எனப்படும் மார்கழியில், சூரியன் தனுசு ராசியைக் கடக்கும் போது பூராட நட்சத்திரத்தைக் கடக்கப் பதினான்கு

நாட்களை எடுத்து கொள்கிறது. இந்த நாட்களில் கருமேகங்கள் தெற்கு நோக்கி நகருவதை அனுபவத்தில் கண்டுகொள்ளலாம்.

இதெல்லாம் இயற்கை என்று கண்டு கொள்ளாமல், ரசிக்க தெரியாமல் இருப்பவர்களுக்கு இது புரியாமல் இருக்கலாம்.. வளரும் சமுதாயத்திற்கு நாம் இதை சொல்லி தர வேண்டாமா? நமது சோதிட அறிவின் நுட்பத்தையும் இயற்கை தத்துவத்தையும் நாம் மட்டும் அல்ல அடுத்த தலைமுறைகளும் அறிந்து கொள்ள வேண்டாமா?

இந்த பதினான்கு நாட்களும் கர்ப்போட்ட நாட்கள் ஆகும்.(இந்த ஆண்டு 29-12-2022 முதல்) அதாவது மழை கருக்கொள்ளும் நாள் அல்லது மேகம் சூலாகும் நாள், என புரிந்து கொள்ளுங்கள்..

ஒரு பெண்ணின் பத்துமாத கர்ப்பகாலத்துடன் இதனை ஒப்பிட்டு பாருங்கள் மார்கழியில் கர்ப்பம் தரிக்கும் ஒரு பெண்.. ஒன்பது மாதம் கழித்துப் புரட்டாசிக்குப் பின் மகப்பேறு அடைவார்..

அதே கோணத்தில், தான் இயற்க்கை அன்னை, இந்த நாட்களில் மழை முறையாக சூல் கொண்டால், ஒன்பது மாதம் கழித்து அடுத்த ஆண்டில் ஐப்பசி, கார்த்திகையில் மழைப்பொழிவு அளவும் முறையாக இருக்கும் என்று பொருள் கொள்ளுங்கள். சென்ற ஆண்டும் இதை சொல்லி இருந்தோம். அதே போல மழை பொழிவு இருப்பதை நாம் கண் கூடாக கண்டு வந்து இருப்பதை பாலசோதிட வாசகர்கள் அறிவார்கள்.

எப்போ எங்கே மழை பெய்யும் என வானிலை ஆராய்ச்சி மையம் என எதுவும் இல்லாத பொழுதில் இருந்தே நமது சோதிட சாத்திரம் சொல்லி தந்து இருக்கிறது என்றால் சோதிட அறிவு நாம் ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டியது அவசியம் என்பது புரிகிறது இல்லையா..

இந்நாட்களில் லேசான தூறல், மெல்லிய சாரல் போன்ற மழை இருந்தால் மேகம் சரியாக கருகட்டி இருக்கிறது என்று பொருள்.. இதனால் அடுத்த ஆண்டு நல்ல மழையை எதிர்பார்க்கலாம் என்று விவசாயிகள் புரிந்து கொள்வார்கள். மானாவாரி பயிர்கள் சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு இது புரிந்து கொண்டு செயல்பட வசதியாக இருக்கும்.

இப்படி அல்லாமல், இந்த கர்ப்போட்ட நாட்களில் கனமழை பெய்து சூறைக்காற்று வீசினாலோ, கடும் வெயில் இருந்தாலோ மேகத்தின் கருக்கலைந்து விட்டது என்று பொருள் கொள்ளலாம்.

எனவே மார்கழியில் கன மழை பெய்தால் அடுத்த ஆண்டு பருவமழை பொய்க்கும் என்பதை குறிப்பால் சொல்லும் இந்த கர்போட்டம் பற்றி தெரிந்து சோதிடம் சொல்லும் இந்த குறிப்பை தெரிந்து கொள்ளுங்கள்.

இன்றைய சூழலில் வாழ்க்கையின் மாறுபட்ட நிலையில் நம்மில் பலரும் சோதிடம் சொல்லும் பாடத்தை புரிந்து கொள்ளாமல் நவகிரகங்களை மட்டும் சுற்றி வருகிறோம்.. சனி என்றால் பயப்படுகிறோம்.. இத்துடன், சூழலியலையும் கெடுக்காமல் இருப்பதில்லை.

இந்த கேடுகளும் பருவநிலை மாற்றமும் கருக்கொள்ளும் மேகத்தைக் கலைக்கும் வில்லன்களாக உருவெடுப்பதால்தான் ஒவ்வொரு வருடமும் மழையளவு குறைகிறது என்பதை நாம் ஒவ்வொருவரும் அறிந்து கொண்டு சூழலியல் புனரமைப்பு செய்ய ஒவ்வொருவரும் கரம் நீட்ட வேண்டும்.

எனக்கு என்ன விவசாய நிலமா இருக்கு விவசாயமா செய்கிறேன் என்று ஒதுக்கி தள்ளாமல் சூழல் பாதுகாப்பை மனதில் நிறுத்தி, அடுத்த தலைமுறைகளுக்கு அரணாக இருக்க வேண்டும்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# -44-

தினமும் ஏதாவது ஒரு வங்கியில் இருந்து போன் வந்து கொண்டு தான் இருக்கிறது.. சார் கடன் வேண்டுமா..? குறைந்த வட்டியில் கடன் தருகிறோம் வேண்டுமா...? என்று...

இப்போ வங்கியில் நிறையா சலுகை வேற இருக்கு ப்ராசசிங் கட்டணம் கிடையாது, எந்த டாக்குமெண்டும் தேவையில்லை சிபில் ஸ்கோர் கூட தேவையில்லை என எதையாவது சொல்லிக்கிட்டு ஒன்னு வரும்.

அன்பு, உறவு, உழைப்பு, என தொடங்கி இறப்பு வரை, எல்லாவற்றையும் பணமாக பார்க்கும் இன்றைய உலகில், பொதுவாக பாருங்கள், எல்லோருடைய பிரச்சனைக்கும் அடிப்படையில் இருப்பது ஒன்று தான் ... அதான் “பணம்...”

இன்றைய நாளில் பணம் சம்பாதிப்பது என்றதும் பலரும் கை காட்டுவது பங்கு சந்தையை தான்.. பாருங்க சார் 50 ஆயிரத்தில் இருந்த சென்செக்ஸ் இப்போ 62 ஆயிரத்தை தாண்டி விட்டது என்று நமக்கு பாடம் எடுப்பார்கள்.

சிலர் மியுச்சுவல் பண்டு என்று அந்த பக்கம் திரும்பி நிற்ப்பார்கள்.. நிலம் ரியாட் என்று இன்னொரு பக்கம், விவசாயம் வியாபாரம் என்று இன்னொரு பக்கம், இதைவிட,

காலையில் பங்கு சந்தை, மாலையில் கமாடிட்டி சந்தை, இரவில் கரன்சி சந்தை என ஒரு நாளில் இருபத்து நான்கு மணி நேரமும் பணம் சம்பாதிக்கும் வாய்ப்பு இருக்குது என சொல்லுவார்கள்.

வாய்ப்பு எல்லாம் இருக்கு சரி.. ஆனால், அந்த வாய்ப்பில் பணம் சம்பாதிக்கும் வாய்ப்பு நமக்கு இருக்குதான்னு தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்கு தானே சோதிடம் உங்களை அடையாளம் காட்டி தருகிறது..

உதாரணமாக, குறைந்த விலைக்கு வாங்கிய ஒரு பங்கின் விலை உயருகிறது என்றால் அது ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கு மட்டுமே லாபம் பெற்று தரும்... எந்த பங்கை வாங்குவது எப்போ விற்பது என்பதில் வேறு சிலருக்கு சிக்கல், பொறுமை இல்லாத தன்மை அவசரம் பேராசை இப்படி பல கூறுகள்.

இதில் எங்கே சம்பாதிக்க,, சில நூறுகளை சம்பாதித்து விட்டு பல ஆயிரங்களை விடும் புத்திசாலிகளும் இருக்கத்தானே செய்கிறார்கள். என்று நீங்கள் உங்கள் அனுபவத்தை சேர்த்து சொல்லும் ‘முனகல்’ சத்தம் கேட்கிறது.

சரி, இதற்கு என்ன செய்ய... என்பது தானே உங்கள் கேள்வியாக இருக்கும். கொஞ்சம் இந்த பக்கம் வாங்க... சோதிடத்தில் உள்ள சில நுணுக்கங்களை தெரிந்து கொள்ளுங்கள்.. அப்புறம் பாருங்கள் உங்கள் பண பெட்டியின் இருப்பை..

இன்று இந்த பங்கை வாங்குகள் என்று சோதிட ரீதியில் குறிப்பு சொன்னால், சந்தை அந்த பங்கிற்கு நன்றாக உள்ளது என அதை வாங்கி நஷ்டம் அடையும் பலரையும் நாம் பார்த்துக் கொண்டு தானே இருக்கிறோம்...

கிரகங்கள் ஒவ்வொரு நொடிப் பொழுதிலும் நகர்ந்து வரும்.. இந்த அமைப்பை கொண்டே கோச்சார பலன்கள் சொல்ல படுகிறது, என்பதை நம்மில் சிலர் அறிந்து இருக்கலாம். இந்த கோச்சாரம், நமது பிறப்பு ஜாதகத்துடன் இணைத்து கிரக இணைவுகளை படிக்கும்

போது, அன்றைய பங்கு சந்தை லாபம் தருமா என்று சொல்ல முடியும்.

இன்றைய பங்கு சந்தையில் intra day யில் எப்போ வாங்கலாம் என்பது முதல் இன்னிக்கு எந்த segmentல் விளையாட வேண்டும் என்பது வரை சொல்ல முடியும்..

ஆஹா.. அப்படியா என்று கேட்க வரும் உங்கள் ஆர்வம் புரிகிறது.. முதலில் ஐந்து அடிப்படைகளை புரிந்து கொள்ளுங்கள்..

1) உலகத்தில், எந்த தொழிலாக இருந்தாலும் இந்த மூன்று பிரிவில் அடக்கி விடலாம். அதாவது, உற்பத்தி செய்து தருதல், அடுத்தது, வாங்கி விற்கும் வியாபார சந்தை, மூன்றாவதாக சேவை தொழில்கள்.. இந்த அடிப்படையில் கிரக ரீதியாக பிரித்துக் கொண்டுவிட்டால் மற்றது சுலபம். இரும்பு என்றால் சனி, தங்கம் என்றால் குரு, வெள்ளி என்றால் சுக்கிரன் என்பது போல,

2) முழுமையாக பங்கு சந்தையை தெரிந்து கொள்ளாமல் அவர்கள் டிப்ஸ் தருகிறார்கள் இவர்கள் வாங்குகிறார்கள் என்று வாங்காதீர்கள்.

3) ஒரு நாளைய ஒரு சந்தையிலேயே intra day, delivery, F&O, BTST என பல முறைகள் இருக்கிறது. இது அது என ஓடாமல் ஒன்றை முழுமையாக தெரிந்து கொள்ளுங்கள். அதில் விளையாடுங்கள்.

4) Go with FLOW என்று சொல்வது போல சந்தையின் போக்கிற்கு ஏற்ப உங்கள் சந்தை நாளை கழிக்க வேண்டும் என்பதில் தெளிவாக இருங்கள். இன்றே சம்பாதிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. நாம் உயிருடன் இருக்கும் வரை சந்தையும் இருக்கும் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

5) ஆசையையும் தேவையையும் சமன் செய்து உங்கள் உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் தராமல் அறிவுக்கு முக்கியத்துவம் கொடுங்கள். உங்கள் உள் மனது சொல்வதை கேளுங்கள்.

இது மட்டும் இல்லீங்க... ராகுவும் புதனும், சந்திரனும் அன்றைய சந்தை நிலவரத்தை நமக்கு அடையாளம் காட்டும்...

இதில் 2-9-11 ம் பாவங்கள் பாவாதி பாவம் அதில் தொடர்புடைய கிரகங்கள் அன்றைய கோச்சாரம் இத்துடன் 6-8 என வரிசையாக புரிந்து கொண்டால் முதலை இழக்க வேண்டிய அவசியமில்லை.

அதனால் தான் பாருங்க.. சந்தை உயர்ந்து வரும், ஆனால் சிலருக்கு லாபம் உயராது இன்னும் சிலர் நஷ்டத்தை சந்திப்பார்கள்.. இப்படி நிறையா சொல்லலாம்..

சோதிட அடிப்படையில் ஒருவருக்கு நாளை சந்தை நன்றாக இருக்கும் ஆனால் நீங்கள் நாளைக்கு இந்த சந்தையில் விளையாடாதீர்கள் என்று ஒருவருக்கு சொன்னால், நமக்கு முன்னாடி தலையாட்டிவிட்டு, மறுநாள் நஷ்டத்தோடு நம்மை வந்து பார்ப்பார்கள்.. நமது வாழ்நாள் இருக்கும் வரை சந்தையும் இருக்கும்,

இன்னிக்கே சம்பாதிக்க வேண்டும் என்று அவசியம் இல்லை என்று சொன்னால் ஏற்றுக் கொள்ள சிலர் தயங்குவார்கள்

தாரா பலன், சந்திர பலன் பார்க்கும் பலர் பங்கு சந்தை கோணத்தில் அன்றைய நிலவரத்தை பார்த்து புரிந்து கொண்டு அதற்கேற்ப பங்குகளை வாங்கவோ, அல்லது அந்தந்த segmentல் விளையாடவோ செய்தால், பங்கு சந்தை உயர்ந்தாலும், குறைந்தாலும் கவலை கொள்ள தேவையில்லை என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

இதை சரியாக புரிந்து கொண்டால் “உங்களுக்கு பணம் சம்பாதிக்க தெரியுமோ?” என்று நீங்கள் அடுத்தவர்களை கேட்கலாம்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# -45-

காதல் ... காதல்... காதல்...
காதல் போயின்
சாதல்.. சாதல்.. சாதல்...

என்பது முண்டாசுக் கவிஞன் பாரதியார் நமக்கு தந்த குயில் பாட்டு.. அது சரி இப்போ எதுக்கு அது என்று கேட்க வருகிறீர்கள்.

சங்க இலக்கியங்களிலும் காதல் இருந்தது.. பக்தி பனுவல்களிலும் தன்னை பெண்ணாகவும் கடவுளை ஆணாகவும் செய்த ஆழ்வார் பாசுரங்கள், கோவை போன்ற அகப் பொருள் பாடல்கள் என பல சான்றுகளாக காட்ட முடியும்.

முன்பெல்லாம் இருந்த காதல், வழக்கு ஒழிந்து போச்சு என்று சொல்லும் அளவுக்கு இப்போ காதல் மன இறுக்க தளர்ச்சிக்காகவும், பொழுதுபோக்காகவும் மாறி போச்சு என்று தான் சொல்ல வேண்டும்..

இதற்கு பெயர் தான் காதலா? என்று கேட்கும் அளவுக்கு காதல் வந்து விட்டது என்றால் நாமும் அதை பார்த்து ரசித்து விட்டு போக வேண்டியது தானே என்ற மனநிலையில் பலரும் இருக்கிறார்கள்.

சேர்ந்து வாழும் காதலர்களை போல, காதலில் பிரிவும் இருந்து இருக்கிறது. இன்றைய நாளில், அது சாதியால், சமுதாய அந்தஸ்தால், பணத்தால், பெற்றோர்களின் ஈகோவால், காதலர்களுக்குள்ளே உள்ள ஈகோவால் இப்படி பல காரணங்களை சொல்ல முடியும்.

முன்பெல்லாம் காதல் தோல்வி என்றால், உயிரை கூட மாய்த்துக் கொள்ளும், இளசுகள் இருந்தன.

அதன் பிறகு, காதல் தோல்வி என்றால், “தேவதாஸ்” படத்தை அடைமொழியாக வைத்து ‘என்னப்பா தேவதாஸ் மாதிரி தாடி வைத்து இருக்கிறாய்?’ என்று கேலி பேசுவார்கள்.

அடுத்து வரும் காலங்களில், அந்த நிலை மாறி, காதல் என்றால் பிரிவும் வரத்தானே செய்யும் என மனதை தேற்றிக் கொண்டு, “எங்கிருந்தாலும் வாழ்க” என அவரவர்கள் பாதையில் வாழ்க்கையை எடுத்துக் கொண்டு மனதை தேற்றிக் கொண்டனர்.

இதனை அடுத்து, காதல் தோல்வி என்றால், விவாகரத்து செய்து விட்டு வரும் வரை காத்திருக்கிறேன் என்ற நிலையில், தொடர்ந்து... என்னவெல்லாம் வருமோ என்று நீங்கள் நினைப்பது புரிகிறது.

ஒருதலை காதலை ‘கைக்கிளை’ என தமிழ் இலக்கியங்கள் சொல்லும். காதல் எப்படி செய்ய வேண்டும் அதன் நிலைப்பாடு என்ன என்பதையும், காதலர்களை, தலைவன், தலைவி என்று அடையாள படுத்தி காதலை நமக்கு கற்று தருவது தமிழில் உள்ள சங்க இலக்கியங்களை தவிர வேறு என்ன இருக்கு சொல்லுங்கள்..

இதனால் தான், “யாம் அறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்” என்று 29 இந்திய மொழிகளையும், 3 அந்நிய மொழிகளையும் கற்று உணர்ந்த பிறகே தைரியமாக, பாரதியும், சொன்னானோ என்பதில் சந்தேகம் யாருக்கும் இருக்க வாய்ப்பு இல்லை.

இதை புரிந்து கொள்ளாமல் இன்றும் தாய் மொழி தமிழாக உள்ள சில குடும்பத்தில் குழந்தைகள் வீட்டில் (எப்போதாவது)

தமிழில் பேசுவார்கள் ஆனால் அவர்களுக்கு தமிழ் எழுத படிக்க தெரியாது என்பது போல இருக்கும் பல குடும்பங்களை நான் பார்த்திருக்கிறேன். மற்ற மொழிகளை படிப்பது தவறு இல்லை, அவைகளை திணிப்பது கூடாது என்றாலும், தாய் மொழியை மறக்கலாமோ?

சரி.. இந்த காதலை பற்றி என்ன தான் தமிழ் சங்க இலக்கியங்களில் சொல்லி இருக்கு, என கேட்க வருகிறீர்கள் புரிகிறது. இலக்கியங்களில் இருந்து சொல்வது ஒரு பக்கம் இருக்கட்டும் நாம் சோதிடத்தில் காதலை தெரிந்து கொள்ள வேண்டாமா?

‘காதலா.. காதலா, காதலால் தவிக்கிறேன்’. என்று பாடினாலும், ‘காதலிக்க நேரமில்லை, காதலிப்பார் யாருமில்லை’ என்று ஓடினாலும், காதல் என்று சொன்னதும் காதலர்களுக்கும் கண்ணியர்களுக்கும் ஏன் வயதான அன்றைய இளைஞர்களுக்கும் கிளுகிளுப்பு இல்லாமலா இருக்கும்.

ஒரு ஜாதகத்தை பார்த்து பலன் சொல்வது போல இந்த காதலை சொல்ல வேண்டாமா என்று நமக்கு கேட்க தோன்றும். ஒரு ஜாதகத்தை பார்த்து அங்க அவயங்களை சொல்ல முடியும், உடம்பில் உள்ள மச்ச குறிகளை சொல்ல முடியும் என்றாலும் அவைகளை சிந்திக்க இன்னொரு சந்தர்ப்பதை எடுத்துக் கொண்டு, இந்த வாரம் காதலை பற்றி சிந்திப்போம்.

சோதிடத்தில், காதல் என்று சொன்னதும் கண் முன்னாடி வந்து நிற்பவர் புதன் தான். அட.. மிதுனத்திற்கும் கன்னிக்கும் புதன் தான் ஆட்சி வீடு என்று சொல்றீங்க சரி தான்.. இந்த புதனின் வீட்டிற்கு இரண்டாம் இடத்தில் கேது இருந்தால் காதல் வரும்.

ஜாதகத்தை பார்த்து ஒருவர் காதல் செய்வார் என்று சொல்ல புதனுடன் கேதுவையும் சேர்த்துக் கொள்ளுங்கள். புதன் கோணத்தில் கேது இருந்தால் காதல் தேடி மட்டும் அல்ல ஓடியும் வரும்.

அப்போ அந்த காதல் எப்படி.... (நிறைவேறும்) என்று சொல்லி நெளியும் போதே புரிகிறது அதை சொல்வதற்கு தான் இந்த வார செய்தி..

காதலுக்கு பார்வை முக்கியம் இல்லையா. கண்ணும் கண்ணும் கொள்ளை அடித்தால் காதல் என்று தானே அர்த்தம். ஆம் வளர் பிறை சந்திரனோடு, குருவோ, சுக்கிரனோ கேதுவுடன் இணைவு பெற்ற புதனை பார்த்தால், ஆஹா.. ஓஹோ.. தான். காதல் நிறைவேறும்.

காதல் குடும்பம் வாழ்க்கை எல்லாம் இன்பத்தில் திளைப்பதர்காகவோ, வாரிசுகளை பெற்று எடுப்பதற்காகவோ மட்டுமல்ல. குடும்பம் என்பது அறச் செயல்களை செய்ய வேண்டும் என்பதற்காக தான் என்ற அடிப்படையை புரிந்து கொள்ளுங்கள்.

கண்ணகியை விட்டு கோவலன் விலகிய போது, கோவலன் பிரிவை எண்ணி வருந்தியதை விட கண்ணகி, கணவனுடன் சேர்ந்து செய்ய வேண்டிய அறச் செயல்களை செய்ய முடியவில்லையே என்று தான் வருத்தியதாக சிலப்பதிகாரத்தில், வரும் செய்யுள்களை படித்து பாருங்கள்.

காதலை சொல்லியாச்சு, அப்படின்னா காதல் தோல்வி, வந்தால், அங்கே தான் இணைவு பெற்ற புதன் கேதுவை செவ்வாய் தனது பார்வையால் பார்ப்பார் அங்கே காதல் முறிவு அல்லது நிறைவேறாத காதல், காதல் தோல்வி இப்படி முடியும்.

நாங்கள், காதலுக்கு சில்வர் ஜூபிளி கூட கொண்டாட போகிறோம் என்று சொல்வது போல நாங்களும் தான் இத்தனை வருஷமாக காதலிக்கிறோம், என்று சொல்பவர்கள் ஜாதகத்தை பாருங்கள். செவ்வாய்க்கு பதில் இந்த இணைவு பெற்ற கிரகங்களை சனி பார்த்துக் கொண்டு இருப்பார்.

அட இவ்வளவு தான் காதலா என்று யோசிக்காமல், தசா புத்தி, காதலை சொல்லும் நேரம், அன்றைய கோச்சாரம், அதனால் வரும் காதல் சந்திப்பில் சண்டை என ஒவ்வொரு விடயங்களையும் சோதிட சாஸ்திரம் குறித்து காட்டுகிறது என்றால், சோதிடத்தை சும்மா விட்டு விட முடியுமா என்ன..

தொடர்ந்து பால ஜோதிடம் இதழை வாங்கி படியுங்கள். பொக்கிஷங்களை .சேர்த்து வைத்துக் கொள்ளுங்கள்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

# -46-

புத்தாண்டு பலன்கள், சனிப்பெயர்ச்சி பலன்கள் என திரும்பிய பக்கம் எல்லாம் செய்திகளாக இருக்கிறதே.

இது போன்ற பலன்கள் உங்கள் பார்வையில் சொல்ல வேண்டும் என நாங்கள் விரும்புகிறோம் என்று சில அன்பு உள்ளங்கள் குறுஞ்செய்தி அனுப்பி கேட்டுக் கொண்டனர்.

எல்லோரும் சொல்லும் போது, நாமும் இது போல சொல்ல வேண்டுமா என யோசித்துக் கொண்டிருந்த போது, பங்கு சந்தை பற்றி அவ்வப்போது impressive பதிவுகள் போடுகிறீர்கள். கிறிஸ்துமஸ்க்கு பங்கு சந்தை குறையும் என்று crystal clear ஆக சொன்னீர்கள். யாரும் எதிர்பாராத வகையில் 1000 புள்ளிகள் சரிந்து சந்தை வீழ்ச்சி கண்டது.

அதனால் இந்த புத்தாண்டில், இந்த ராசிக்கு இந்த பலன் என சொல்லாமல் பங்கு சந்தை எப்படி இருக்கும் என்று சொல்லுங்களேன் என மும்பையில் இருந்து ஒரு அன்பர் கேட்டுக் கொண்டார்.

பஞ்சாங்கத்தை பார்த்து தமிழ் புத்தாண்டின் போது, கந்தாய பலன் சொல்வது போல இந்த 2023ஆம் ஆண்டு பங்கு சந்தை எப்படி இருக்கும்? என மும்பை அன்பரின் அன்பு கட்டளையை ஏற்று அவருக்கு சொல்வது போல பால சோதிட வாசகர்களுக்கும் சொல்லலாம் என்று தோன்றியது தான் இந்த வார பதிவு.

அடுத்த மாதம் பட்ஜெட், அதை தொடர்ந்து தேர்தல் என வரிசை கட்டி நிகழ்வுகள் இருந்தாலும், ஒரு முதலீட்டாளர் என்ற வகையில் பங்கு சந்தையை கணிப்பதில் எல்லோருக்கும் உரிமை

உண்டு. அதில், தவறு எதுவும் இல்லை, என்றாலும், பங்கு சந்தை பற்றிய இந்த குறிப்பு செய்திகள் சோதிட பார்வையிலான சிந்தனையே தவிர, இந்த பங்குகளை வாங்குங்கள் அல்லது விற்று விடுங்கள் என்று ஆலோசனை சொல்லும் தகவல் அல்ல.

அது போல ஆலோசனை சொல்லும் செபி பதிவு பெற்ற ஆலோசகரும் அய்யர் இல்லை என்பதை மனதில் குறித்துக் கொண்டு, தொடர்ந்து படியுங்கள்.

பங்கு சந்தையில் பயன்படுத்தும் (technical jargon) சொற்களை முடிந்த அளவு எளிதில் புரியும் படி தர முயற்சி செய்து உள்ளேன். சந்தையில் உள்ளவர்களுக்கு இது புரியும். மற்றவர்கள் இதை தெரிந்து கொள்வது தவறும் இல்லை. அறிவுக்கு திரை போடலாமா என்ன?

இந்த பங்கு சந்தை குறிப்புகளுக்கு நாம் வரிசை படுத்தி வைத்துக் கொள்ளும் கிரகம் ராகு, புதன், மற்றும் சந்திரன் தான் என பல முறை முன்பே சொல்லி இருக்கிறேன்.

இந்த அடிப்படையில் ஜனவரி 1 ம் தேதி மும்பையை இடமாக வைத்து கோச்சராத்தை வைத்துக் கொண்டு, சில பொதுவான குறிப்புகளை சொல்ல வரும் பதிவு தான் இது.

இதில் சொன்னபடி சந்தை நிலவரம் அமைந்து விட்டால், உங்கள் முதுகில் தட்டிக் கொள்ளுங்கள். அப்படி இல்லை என்றால், இது முயற்சி தான் நாம் இன்னமும் பயிற்சி பெற வேண்டும் என்று பாசிடிவ் கோணத்தில் எடுத்துக் கொள்ளுங்கள். ஏன் என்றால் பங்கு சந்தையை யாராலும் கணிக்க முடியாது என்பது பொது விதி.

சரி சிந்தனைக்கு வருவோம்.

குறிப்பிட்டபடி கோச்சாரத்தில், அன்றைய நட்சத்திரம் கேதுவின் நட்சத்திரமான அசுபதி. கேதுவின் இயல்பான காரகத்துவமே ஒன்றை அழித்து, ஒன்றை தருவது என்பது . சோதிட அன்பர்களுக்கு தெரிந்து இருக்கும். வளர்ச்சிக்கு ஏதுவாக இருக்க கூடிய கிரகம் என்பதால் இது கேது என பெயர் பெற்றதோ என்று நாம் அடிக்கடி சொல்வது உண்டு.

பங்கு சந்தைக்கு ராகு என்று தானே சொல்லுவீங்க, இப்போ கேதுவை பற்றி சொல்றீங்களே என்று நீங்கள் கேட்க வருவது புரிகிறது.

சாதத்திற்கு தொட்டுக் கொள்ள ஊறுகாய் வேண்டும். அதற்காக ஊறுகாயையே சாப்பிட முடியாது என்பது போல இதை புரிந்து கொண்டால், சொல்ல வரும் செய்தி சொல்லாமலே புரியும்.

இந்த கோச்சாரப்படி, மீன குருவை தொடர்ந்து ரிஷப செவ்வாய் வரை நமக்கு தேவையான கிரகங்கள் வரிசை கட்டி நிற்கிறது. இதில் சர்ப்ப கோணத்தில் புதனும், புதன் கோணத்தில் சந்திரனும் என இருக்கிறது. என்ற இயல்பான நிலையினை புரிந்து கொண்டு, இந்த ஆண்டு பங்கு சந்தை எப்படி இருக்கும் என்ற குறிப்புக்குள் போகலாம் வாங்க.

இந்த ஆண்டு சோதிட பார்வையில், இரண்டு முக்கிய நிகழ்வுகள் இருக்கிறது ஒன்று, எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கும், அடுத்து சில நாட்களில் வரக் கூடிய சனிப்பெயர்ச்சி. மற்றொன்று, இந்த ஆண்டின் பின் பகுதியில் வர இருக்கிற சர்ப்ப கிரக பெயர்ச்சி, இதையும் மனதில் நிறுத்திக் கொண்டு, சந்தை நிலவரத்தை சிந்தித்தால்,

சொல்ல வரும் விஷயங்கள் உங்களுக்கு எளிதல் மனதில் பதியும்.

கும்பத்திற்கு வரும் சனியின் மூன்றாம் பார்வை மேஷத்தில் உள்ள ராகுவில் பதிக்கிறது. கோச்சாரத்தின் படி சந்திரன் சர்ப்பத்துடன் இருப்பதாலும், இந்த ஆண்டின், முற்பகுதியில், பங்கு சந்தை மிகுந்த volatile என்று சொல்லும் நிலையற்ற தன்மையையும், மிகுந்த ஏற்ற இறங்கங்களையும் கொண்டு இருக்கும்.

குறிப்பாக, வருவாயை விட கடன் அதிகமாக உள்ள குறிப்பிட்ட “அந்த” நிறுவங்களின் பங்குகள் எதிர்பாராத சரிவை நோக்கி செல்லும். அந்த பங்குகள், இப்போது வேகமாகவும் குறைந்த நாட்களில் உச்சத்திற்கும் சென்று இருக்கும் பங்குகள் தான் அவை.

அந்த பங்குகளில் முதலீடு செய்து இருப்பவர்கள், அல்லது தங்கள் portfolioவில் holdல் வைத்து இருப்பவர்கள் தலையில் கையை வைத்துக் கொள்வதை தவிர வேறு வழி இல்லை என்ற நிலையில் இருக்கும். அப்படியா சரி எல்லாவற்றையும் விற்று விடலாமா என்று கேட்காதீர்கள்.

அது எந்த பங்குகள் என சொல்லுங்கள் என கேட்க வரும் உங்கள் ஆர்வம் புரிகிறது. அதை வெளிப்படையாக சொல்ல கூடாது என்பது ஒரு புறம் இருக்க, நீங்கள் சம்பந்தப்பட்ட நிறுவனங்களின் தணிக்கை அறிக்கை, ஐந்தொகை கணக்குகள், இவைகளை வாங்கி படியுங்கள் analyse செய்து பாருங்கள்

அது தொடர்பான விவரங்கள் பல இணைய தளங்களின் கிடைக்கிறது அதை எடுகோளாக வைத்துக் கொண்டு சரி

பார்த்துக் கொள்ளுங்கள். அப்போது தான் உங்களுக்கும் பயிற்சி கிடைக்கும்.

நீங்கள் இன்று சம்பாதிக்க வேண்டும் என்பது நமது நோக்கமல்ல தொடர்ந்து சம்பாதிக்க வேண்டும் என்பது தான் விருப்பம்.

ஒன்று இரண்டு மாங்காயை மரத்தில் இருந்து பறித்து கொடுப்பதை விட உங்களுக்கு மரம் ஏற கற்றுக் கொடுத்து விட்டால், வருமானமும் ஏறும் அல்லவா. என்ற சிந்தனையை கவனத்தில் கொண்டால் சொல்ல வரும் விஷயம் புரிந்து விடும்.

mid cap மற்றும் small cap நிறுவங்களின் பங்குகள் எதிர்பாராத அபரிமிதமான வளர்ச்சியை தொட்டு செல்லும் என்றாலும் எதிர்பாராத நிலையில் சரிவையும் காணும். ஸ்டீல் மெட்டல், கேளிக்கை மற்றும் கல்வி தரும்., நிறுவங்களின் பங்குகள் ஆரோக்கியமான வளர்ச்சியை பெறும். தனியார் துறை வங்கி பங்குகள் கை கொடுக்கும்.

கொரணா அலை எங்கும் இருக்கிறதே, மருத்துவ நிறுவனங்களின் பங்குகள் எப்படி இருக்கும் என நீங்கள் யோசிப்பது புரிகிறது. இப்போதைக்கு அந்த பக்கம் எதிர் பார்க்கும் பலனை தர போவதில்லை என்பது தான் குறிப்பு.

நாங்கள் இந்த ரிஸ்க் எல்லாம் எடுப்பதில்லை ‘நிப்டி’ மட்டும் தான் அது எப்படி இருக்கும் என்று சொல்லுங்க என்று கேட்க வரும் உங்களுக்கு குறிப்பு இது தான் இப்போ 18000 த்தின் விளிம்பில் இருக்கும் நிப்டி இன்னும் குறைந்து 16000த்தை கூட தொட்டு விடும்.

"அச்சச்சோ...." அவ்வளவு தானா இந்த ஆண்டு பங்கு சந்தை என பயப்பட வேண்டாம். ஜூலை மாத பின் பகுதியில் இருந்து எவ்வளவு வேகமாக பந்து கீழே எறியப் படுகிறதோ அவ்வளவு வேகமாக எறியப்பட்ட பந்து மேலே உயரும் என்பது போல, சந்தை இந்த ஆண்டிலேயே பின் பகுதியில், படு வேகமாக உயரும். இது சர்ப்ப கிரக பெயர்ச்சியை ஒட்டி நிகழும்.

மொத்தத்தில் மிகுந்த ஏற்ற இறக்கம் கொண்டு விளங்கும் இந்த ஆண்டு சந்தை, முதல் எட்டு மாதங்கள் நிலையற்ற தன்மையிலும் அடுத்த நான்கு மாதங்களில் கணிசமான லாபத்தையும் பெற்று தரும். புத்திசாலித்தனமாக விளையாடுபவர்கள் கணிசமான லாபத்தை பெறலாம்.

ஆகா, அய்யர் சொல்லி விட்டார் என்று இருக்காமல், நீங்கள் பங்கு சந்தையில் குளித்து முத்து எடுப்பது உங்களின் முழுமையான பொறுப்பு என்பதை எப்போதும் மனதில் நிறுத்தி வையுங்கள்.

இது கோச்சாரா அடிப்படையில் சொல்லப்பட்ட குறிப்புகள் தான், இவைகளுடன் உங்களின் பிறப்பு ஜாதகத்தை வைத்துக் கொண்டு உங்கள் நிலையை நீங்கள் கணித்துக் கொள்ள தரப்பட்டது தான் இந்த சிந்தனை.

என்னிடம் உள்ள பற்றாக் குறை பணம் அல்ல நேரம் தான். அதை புரிந்து கொண்டு, நீங்கள் கேட்க வரும் விஷயங்களை பால சோதிடத்திற்கு எழுதி கேளுங்கள். மின்னஞ்சல் அனுப்புங்கள், தொலைபேசி தொடர்பை தவிருங்கள் என அன்பு வேண்டுகோளை பதிவு செய்கிறேன்.

நல்லதே நினைப்போம் நல்லதே நடக்கும்.

# எமது பிற வெளியீடுகள்





















புத்தக கட்டமைப்புக்கு பணம் தந்து உதவலாம். இது இன்னும் புத்தகம் வெளிவர ஊக்கம் அளிக்கும்

# நூலாசிரியர் பற்றி…

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் பன்மொழி திறமை பெற்றவர். இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். "சித்தாந்த ரத்னா", "திருவருட் செல்வர்", "கைரேகை கலைஞன்" போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிடம் அல்லாத புத்தகமும், சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம். இவரின் எண்ணக் கருத்துக்களை நூலாக்கி படைப்பதில் பதிப்பாளராக பெருமை கொள்கிறோம்